# யூகோபாங்கின் உதவிக் காம்-

## இப்பொழுது உங்கள் டெபாஸிட், 14% அதிகமாக பயனுடைய வடடியைப் பெற முடியும்

உங்கள் சேமிப்புகளை வளர்க்க விரும்பினால் யூகோபாங்க், எல்லா வாய்ப்புகளையும் வழங்குகிறது. இப்பொழுது உங்கள் ஃபிக்ஸட் டெபாஸிட் வட்டியை, ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்துடன் இணைப்பது மூலம் 14%க்கும் அதிகமான பயனுடைய வட்டியைப் பெற முடியும். அல்லது உங்களது டெபாஸிட்டை எங்களது கேஷ் டெபாசிட் ஸர்டிஃபிகேட் திட்டத்தின் மூலம் 15 வருடங்கள் பூர்த்தி ஆன பிறகு நான்குமடங்குக்கு மேல் அதிகப்படுத்திக் கொள்ளலாம். வட்டி வருமானமோ 28%க்கு மேல்!

இவை தவிர, எங்களது துரிதமான - நேரடியான சேவைகளுடன் சேமிப்புகள், ஃபிக்ஸட் டெபாஸிட் மற்றும் ரெக்கரிங் டெபாஸிட் திட்டங்களும் எல்லா யூகோ பாங்க் கிளைகளிலும் இயங்கிவருகிறது.

விவரங்களுக்கு அருகிலுள்ள யூகோ பாங்க் கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

தாங்களே தங்களுக்கு உதவ மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது

UCOC-38 TAM

# உறுதியும் வேகமும் உள்ள ஹெர்குலிஸ் சைக்கிளில் சவாரி செய்யுங்கள்



உண்மை! ஹெர்குலிஸ் சைக்கிளை அதிக பாரத்தை தாங்கும் அமைப்புகளுடன் உறுதியாக உருவாக்கியுள்ளோம். உதாரணமாக உறுதியான எஃகுக் குழாய்களாலான அதன் ஃபிரேம், வலுவேற்றிய எஃகு செயின், இலகுவாக ஓட்டும் வகையில் ஃப்ரீ-வீல், சிறப்பான பிடிமானத்துக்கும் சுலபமாக பிரேக் பிடிக்கவும் தகுந்த வகையில் சரியான வளைவுகளுடன் கூடிய ஹாண்டில் பார்.

ஹெர்குலிஸின் ஒவ்வொரு பகுதியும் இலகுவான சவாரிக்கு ஏற்ற வகையில் விஞ்ஞான முறைப்படி அமைக்கப்பட்டது.






டிஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை 600053

உங்கள் பணியில் 25 ஆண்டுகள் — 1949-1974

# ஹெர்குலிஸ்

—உலகிலேயே உறுதியான சைக்கிள்.

மிகமென்மையான பிளேடு-களையும், விண்வெளி பிளேடு-களையும் உபயோகித்துப் பார்த்தேன்.



சுத்திமுனைபோல கூரான பிளேடுகளையும் விதவித-மான விநோத உபோகங்-களடங்கிய பிளேடுகளையும் உபயோகித்துப் பார்த்தேன்.



வெட்டுக்காயங்களும், கீறல்களும், எரிச்சலும்தான் மிச்சம்.



கடைசியாக சில்வர் ப்ரின்ஸ் உபயோகித்துப் பார்த்தேன். முகக்ஷவரம் மழமழப்பாகவும், சுத்தமாகவும் இருந்தது... நிறைவேற்றமுடியாத உறுதிமொழிகளல்ல.



# சில்வர் ப்ரின்ஸ்

## சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்... உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.

## சில்வர் ப்ரின்ஸ்–சுகமான க்ஷவரம்...சோகுசான க்ஷவரம்

நீங்கள் சில்வர் ப்ரின்ஸ் கொண்டு மழமழப்பாகவும், சுத்தமாகவும் க்ஷவரம் செய்து கொள்ளலாம். ஏனெனில் இறக்குமதி-யான மிகச் சிறந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில், இந்தியாவில் அதி முன்னேற்ற-




மான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப் படுகிறது சில்வர் ப்ரின்ஸ். நீங்களும் சுகமான க்ஷவரத்தைப் பெறுகிறீர்கள். எனவேதான் சில்வர் ப்ரின்ஸ் முகக்ஷவரத்தை சுகக்ஷவரம் என்கிறோம்.

Grant.5.TM




# விவா

## ஆரோக்கியம் கொழிக்கும் குடும்பங்களில் விரும்பப்படுவதற்கு சில சிறந்த காரணங்கள்

**அதிக ஊட்டமளிக்கிறது:**
நுட்பமான ஆடைப்பால் மற்றும் பார்லி மால்ட்டின் முழு ஊட்டச் சத்துக்களும், கோதுமை மால்ட்டின் அதிக வளமுள்ள ஊட்டச் சத்துக்களும் விவாவில் மட்டுமே கலந்துள்ளன. புரதம், கார்போ-ஹைட்ரேட், வைட்டமின்கள் மற்றும் கனிம சத்துக்கள் கொண்ட இயற்கையின் வளமான ஊற்று இது.

**விரைவில் சீரணிக்கக் கூடியது:**
இதற்குக் காரணம் கோதுமை மால்ட், அதாவது மிக எளிதில் சீரணிக்கும் வடிவிலுள்ள கோதுமை ஊட்டச் சத்து. இதுவும் பால், பார்லி மால்ட், இயற்கையான பால் சர்க்கரைகள் மற்றும் கனிம சத்துக்களும் விசேஷமாகப் பதப்படுத்தப் பட்டிருப்பதால், விவா எளிதில் சீரணிக்கப்படுகிறது; உடனடியாக உட்கிரகிக்கப்படுகிறது; விரைவில் பயனளிக்கிறது.

**கலப்பது எளிது:**
விசேஷ பதமாக்கும் முறையும், வாக்குவம் ட்ரையிங் முறையும் காரணமாக விவா உடனடியாக கரைகிறது. இதைக் கூழாக்க வேண்டிய அவசியமில்லை. விவா தண்ணீரிலும் பாலிலும் எளிதில் கரைகிறது; விருப்பப்படி பருகத் தயார்.

**சுவையில் சிறந்தது:**
விவாவிலுள்ள இரண்டு முக்கியமான சேர்க்கைப் பொருட்கள் மால்ட் மற்றும் பால். அவை விவாவிற்கு முற்றிலும் இச்சுவையைத் தருகின்றன. குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் விரும்பும் வகையில் தனிப்பட்ட ருசியைத் தருகின்றன.

**நவீன தொழில்நுட்ப முறை:**
விவா அதிநவீன தொழில் நுட்ப முறையில், கடுமையான தரக் கட்டுப்பாட்டின் கீழ் தயாரிக்கப் படுகிறது.



இந்தியாவில் தயாரிப்போர்:
ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

தேர்ந்தெடுப்பீர் விவா

**விவா**

தருவது அதிக அளவில் அதிக ஊட்டம்

# அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில்
## இராமேஸ்வரம்

□

# சுவர்ண பந்தன மகா கும்பாபிஷேகம்

**5-2-1975 புதன்கிழமை காலை 9 மணிக்குமேல் 10 மணிக்குள்**

□

அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில் சுவர்ண பந்தன அஷ்ட பந்தன கும்பாபிஷேகம் நடைபெற்று இருபத்தேழு ஆண்டுகள் ஆகின்றன. அருள்மிகு பர்வதவர்த்தினி அம்மனுக்கு சுவர்ண பந்தன தகடுகள் சாற்றி, சுவர்ண பந்தன அஷ்டபந்தனம் செய்யவும் திருக்கோயில் மேல் தளங்களில் தட்டோடு (*PRESSED TILES*) போட்டுப் புதுப்பித்தும், கோபுர கலசங்களில் பழுதடைந்தவைகளைப் புதுப்பித்தும், புதிதாக தங்க ரேக்குப் போட்டும், சுவாமி அம்மன் கொடி மரங்கள் புதிதாக செய்து தங்க ரேக்குப் போட்டும், அம்மன் சுவாமி மற்றும் எல்லா பரிவார தேவதைகளுக்கும் அஷ்ட பந்தனம் செய்தும்

**ஆனந்த ஆண்டு தை மாதம் 23ம் நாள் புதன்கிழமை (5-2-75) காலை 9 மணிக்குமேல் 10 மணிக்குள் மகா கும்பாபிஷேகம் செய்ய திருக்கோயில் அறங்காவலர் குழு தீர்மானித்திருக்கிறது.**

ஆகவே, அதற்கான திருப்பணி வேலைகள் ரூ. 15 லட்சம் செலவில் நடைபெற்று வருகின்றன. திருப்பணிக்கு நிதி வாரி வழங்கி பர்வதவர்த்தினி சமேத இராமநாதசுவாமி அருள்பெறுமாறு வேண்டுகிறோம். திருப்பணிக்கு நன்கொடையாகக் கொடுக்கும் தொகைகளுக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றது. அரசு ஆணை நிர். 50 (எப் 16/40-65.ஐ.டி) (அ. 1. உட்பிரிவு-(6) பிரிவு 8-வருமான வரிச் சட்டம் (43/1961). கும்பாபிஷேக திருப்பணி நன்கொடைகளைத் திருக்கோயில் நிர்வாக அதிகாரிக்கு நேரிடையாகவும் கீழ்க்கண்ட வங்கிகள் மூலமாகவும் அனுப்பலாம். சுவர்ண பந்தனத்துக்குத் தங்கக் காணிக்கைச் செலுத்தலாம்.

1. ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா. 2. இந்தியன் பாங்க். 3. பாங்க் ஆப் மதுரை. 4. இராமநாதபுரம் மாவட்ட கூட்டுறவு மத்திய வங்கி.

| | |
|---|---|
| **எஸ். பி. முனுசாமி** | **எஸ். இராமநாத சேதுபதி** |
| செயலாளர் & பொருளாளர் | (இராமநாதபுரம் ராஜா) |
| திருப்பணிக் கமிட்டி | திருப்பணிக் குழுத் தலைவர் |
| நிர்வாக அதிகாரி / உதவிஆணையர் | அறங்காவலர் குழுத் தலைவர் |

*அறங்காவலர்கள் :*

திரு எஎல். ஏஆர். சோமநாதன் செட்டியார், தேவகோட்டை
திரு டி. கே. சிறைமீட்டான், எம்.எல்.ஏ., பரமக்குடி
திரு ஆர். எம். முருகப்ப செட்டியார், நடராஜபுரம்
திரு ஏ. டி. எம். இராமநாதத் தேவர், அஞ்சக்கோட்டை

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் இழைகள், ஸ்டேபிள் இழை/ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமிகுந்த எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அன்னியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம, நாக்தா (ம.பி.

Sobhagya GR 74-2-Tam.

# தாதி அல்ல, தாய் தேவை என் தங்கத்துக்கு.



வெளியிலே அழைத்துப் போ
என்று வீரிட்டு அழுதான் என்
கண்ணன். அவனுக்குத்
தெரியுமா அம்மாவுக்கு
இருக்கிற வேலைச் சுமை.
என்ன பிழைப்பு இது. ஆயா
மாதிரி ஓயாதுழைத்தால்
தாயாக அரவணைக்க நேரம்
ஏது? இதற்கு ஏதாவது வழி!
ஆராய்ந்தேன். நல்லவேளை
யாக என் தோழி ஒருத்தி
க்ளியர்டோன் பிரஷர் குக்கர்
பற்றிக் குறிப்பிட்டிருந்தாள்.
அதையும்தான் பார்ப்போமே
என்று வாங்கினேன் ஒன்று.
ஆனால், அதிசயத்தை
என்னவென்பேன், அபாரமாக
உதவியது அது.
இன்றோடு அது ஒரு வருஷத்
துக்குமேலாக உழைத்துள்ளது.
நினைப்பதற்கு முன் சமையல்
முடிந்து விடுகிறது; நிம்மதி-
யான ஓய்வு நேரம் நிறைய
மிஞ்சுகிறது.
இப்போதெல்லாம், கூப்பிட்ட
குரலுக்குக் குழந்தைகள்
பக்கத்தில் இருக்கிறேன். கூடி
விளையாட ஒரு தாய்
இருக்கிறாள் என்று குழந்தை
களுக்குத்தான் எத்தனை பாசம்
என் மேல்!



**Kleertone**

**க்ளியர்டோன் வீட்டுபயோக சாதனங்களின் படைப்பகம்**



**மணிமணியான க்ளியர்டோன் சாதனங்கள்
மனம்போல் ஓய்வு தரும் மகிழ்ச்சியோடு உமக்கு.
தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட்.**
பம்பாய் . கல்கத்தா . டெல்லி . சென்னை . இந்தோர் . செகந்தராபாத்
பெங்களூர் . கான்பூர்.

Creative Unit-A 1615-Tam.



# ஆத்ம ஞான ஜோதி சபா

## பம்பாய்



அன்புடையீர் !

நடமாடும் தெய்வம் என போற்றப்படும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு **ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளது** ஆசிகளுடன், தூத்துக்குடி கைவல்யஸ்வாமி மடாதிபதி **ஸ்ரீ D. V. M. சுந்தரம்** அவர்களது தலைமையில், டோம்பிவிலியில் ஒரு தியான மண்டபம் நிறுவி அதில் **விஜயன், பெருஞ்னர், துர்க்கை** முதலான மூர்த்திகளை பிரதிஷ்டை செய்து அருகே அபரகாரியங்களை நடத்த எல்லா வசதிகளுடன் கூடிய கட்டிடம் ஒன்றையும் அமைக்க **ஆத்ம ஞான ஜோதி சபா** முன் வந்துள்ளதும் இதற்கான நிலம் வாங்கி சென்ற 26-4-74ல் துவாரகா சாரதாபீடம் ஜகத்குரு **ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள்** அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டதும் யாவரும் அறிந்ததே.

இதுபோன்ற வசதிகளை பம்பாயில், செம்பூரிலும் மற்றும் இதர பகுதிகளிலும் செய்து கொடுக்க முயற்சிகள் செய்து வருகிறோம்.

சென்ற பிப்ரவரி — மார்ச்சு மாதம் துவாரகா ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் துவக்கி வைத்த மகத்தான **"சதசண்டி மஹா யக்ஞம்"** மாதுங்காவில் வெகு விமரிசையாக நடைபெற்றதை ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் நன்கு அறிவர்.

தற்போது பொதுமக்களின் நலனுக்காகவும், தீமைகள் விலகி நன்மைகள் உண்டாகவும், அன்னை பராசக்தியின் அருள் வேண்டி 1008 சுமங்கிலிகளால் **"தீப பூஜை"** நடத்தத் திட்டமிட்டுள்ளோம்.

இந்த பூஜை கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில், முறையே **செம்பூர், மாதுங்கா, முலுண்டு** பகுதிகளில் நடைபெறும்.

முதலாவதாக செம்பூரில் அகோபில மட்த்தில் 2-12-1974 (கார்த்திகை—திங்களில்) காலையிலும் மாலையிலும் பூஜை நடைபெறும்.

அடுத்து 1-1-1975 (மார்கழி-புதன்) மாதுங்காவில் உள்ள நப்பூ ஹாலில் மேற்கூறிய தீப பூஜை நடைபெறும்.

தாய்மார்கள் தீப பூஜை அன்று தங்கள் குலவிளக்கைக் கொண்டு வந்து அவரவர்களே பூஜை செய்து அன்னை பராசக்தியின் அருளுக்குப் பாத்திரர்களாக வேண்டுகிறோம்.

பூஜையில் பங்கு பெற விரும்பும் அன்பர்கள் கீழ்க்கண்ட விலாசத்திலோ அல்லது எங்கள் பிரதிநிதிகளிடமோ பெயர்களைப் பதிவு செய்து கொண்டு பூஜை செலவுக்காக ஒவ்வொருவரும் ரூ. 21-00 செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

சிறப்பு நிகழ்ச்சிகளின் விபரங்கள் அன்பர்களுக்குத் தபால் மூலம் அனுப்பி வைக்கப்படும். நன்கொடைகள் வரவேற்கப்படும்.

இங்ஙனம் :
**நிர்வாகிகள்**
**ஆத்ம ஞான ஜோதி சபா**

---

பம்பாய் காரியாலய விலாசம் : **18, NEELAKANTH APARTMENTS,**
**AMAR MAHAL, CHEMBUR**
**BOMBAY- 400 089 Tele. 5214228**

ஆனந்த. ஐப்பசி 24 — நவம்பர் 10, '74

★

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


# கல்கி
## அடுத்த வாரம்:



**உஷா அய்யர்**
ஆம், அந்தப் பெயரில்தானே அவர் மிகப் பிரபலமடைந்தார்? மேலட்டையில் வண்ணப் படம்.

**மிடில் ஸ்டம்ப்**
நமது கிரிக்கெட்டின் பலவீனங்களை ஆராய்கிறார்.

**தங்கப் பதக்கம் தேவையா?**
தமிழ்ப் படத்துக்குத் தங்கப் பதக்கம் கிடைக்காதது பற்றித் திரை உலகப் பிரமுகர்களின் சூடான சர்ச்சைகள்

**பயன் தந்த பொழுதுபோக்கு**
வாசக அன்பர்கள் தங்கள் அனுபவங்களை எழுதுகிறார்கள்.

**ஏ. வி. ரமணன்**
மிரூனியாளேவுக்குக் கொடிகட்டிப் பறக்கிறது இப்போது. பேட்டிக் கட்டுரையில் ரமணன் மனம் விட்டுப் பேசுகிறார்.

**இன்னும் பல:**
கதைகள், கட்டுரைகள், ஏராளமான துணுக்குகள், ஹாஸ்ய வெடிகள், விளையாட்டுக்கள், புதிர்கள்.



## பொழுது போக்கு சிறப்பிதழ்

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 30-00 | ரூ. 15-00 |
| இதர நாடுகள் | ரூ. 60-00 | ரூ. 30-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 44-00 | ரூ. 22-00 |



சாரதாஸ் பஞ்சரத்னம்—2.

**மனோரஞ்சனி**யில் மனதை கவர்பவளாகவும்
**ரஜனிபாலா**வில் ரம்மியமாக விளங்குகிறவளாகவும்
**பவிஷ்யராணி**யில் பரவசமூட்டுகிறவளாகவும்
உனது அழகை இந்த உலகம் வியந்து உள்ள
ஆச்சர்யத்துடன் போற்றுகிறது.









இந்த தீபாவளிக்கு சாரதாவின் புதிய டிசைன்கள்
**மனோரஞ்சனி, ரஜனிபாலா, பவிஷ்யராணி**

# சாரதா'ஸ்

பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான இடம்

**தன் பில்டிங்ஸ்,**
**மவுண்ட் ரோடு, சென்னை-600002.**
**போன் : 87177**



**N. S. B. ரோடு,**
**திருச்சி-620002.**
**போன் : 7077**

தீபாவளி முடிய ஞாயிற்றுக் கிழமைகளிலும் விடுமுறை நாட்களிலும் விற்பனை உண்டு.

# இன்றும் ஒரு பட்டேல் தேவை

கல்கி

மலர் 34
இதழ் 15



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

பட்டேல் மறைந்தபோது நாம் வருந்தினோம் என்பது உண்மைதான். ஆனால் அவர் வெகு சீக்கிரமாக நம்மை விட்டுப் பிரிந்தது எப்பேர்ப்பட்ட பேரிழப்பு என்பதை இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு முன்னெப்போதையும் விட மிக நன்றாக உணர்கிறோம்.

வல்லபபாய் பட்டேல் பிறந்து நூறாண்டுகள் ஆகப் போவதை நாடெங்கும் கொண்டாடுகிறார்கள். தேசத்தினை ஐக்கியப்படுத்தியவர், சுதேச சமஸ்தானங்களை இந்தியாவுடன் இணையச் செய்தவர் என்பதே அவரது மிகப் பெரிய சாதனையாகக் கருதிப் பேசப்படுகிறது.

ஆனால் மற்றொரு முக்கியமான பணியை அவர் செய்து வந்ததை ராஜாஜி பலமுறை குறிப்பிட்டிருக்கிறார். அது நேருஜியின் நடைமுறைக்குக் கொண்டு வர முடியாத திட்டங்களை நிதானப் போக்குடன் சாத்தியக்கூறுள்ள திட்டங்களாக மாற்றி அமைத்ததுதான்.

முடியாட்சியில் மதி மந்திரிகள் அரசனுக்கு நல்லது கெட்டதை எடுத்துரைத்தார்கள். ஆனால் ஜனநாயகத்திலோ மந்திரிகளே நாடாள்கிறார்கள். அதிகார ஆணவம் மிகுந்து அடக்கம் இழக்கும்போது அறிவாற்றல் மழுங்கும், சிந்தனைத் தெளிவு சிதையும். நல்ல யோசனைகளைக் கூறுபவர்கள் விரோதிகளாகத் தென்படுவார்கள்!

ஜனநாயகத்தில் மந்திரிகளுக்குச் சாத்தியக்கூறுகளை எடுத்துச் சொல்ல வேண்டியவர்கள் உயர் அதிகாரிகள். ஆனால் அவர்களோ அமைச்சரின் அதிருப்திக்கு உள்ளாவானேன், விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்வானேன் என்று வாளாவிருந்து விடுகிறார்கள். அல்லது மந்திரியை மகிழ்விக்கவே பேசிவிடுகிறார்கள். விளைவு, அதிகார பலம் துஷ்பிரயோகமாகிறது. தேசம் பாழாகிறது. இத்தகைய நிலை ஏற்படாதிருக்கத்தான் பட்டேல் போன்றவர்கள் தேவைப்படுகிறார்கள்.

பட்டேல் இரும்பு மனிதர் என்பது நமக்குத் தெரியும். அவர் தோற்றத்திலும் முக பாவத்திலும் கூட அத்தன்மை பிரதிபலித்தது. ஆனால் இரும்பு மனிதர் என்று நாம் அவரைக் குறிப்பிட்டது அஞ்சா நெஞ்சத்துக்காகத்தான். அந்த இதயம் கடினமானதல்ல. எளியவருக்காக வெண்ணெயாய் உருகும். ஆனால் உண்மைகளை உணர்த்த வேண்டும், நாட்டுநலனைப் பேச வேண்டும் என்னும்போது அவர் இதயம் இரும்பாகியது. அப்போது யாருக்காகவும் அஞ்சமாட்டார், எதற்கும் பயப்படமாட்டார். இதனைக் காந்திஜியும் உணர்ந்திருந்ததால்தான் நேருஜிக்குப் பக்கத் துணையாக அவர் இருக்குமாறு கவனித்துக் கொண்டார். நட்பு இடித்துரைத்தது. தராசின் கோல் சமன் செய்து சீராய் நின்றது.

ஆனால் பட்டேல் காலமான பிறகு படிப்படியாக நிதானப் போக்குள்ளவர்களைக் காங்கிரஸ் விலக்கிக் கொண்டே வந்தது. அவர்களை லட்சியம் செய்யாமல் சோஷலிஸம் என்ற போர்வையில் மேன்மேலும் கம்யூனிஸ சித்தாந்தங்களின்படியே காரியங்கள் நடக்கலாயின. எல்லாவற்றையும் அரசாங்கமே ஏற்று நடத்தினால் நாளைக்கே நாட்டில் பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடும் என்றார்கள். தேசிய மய மோகமும் டம்பாச்சாரி திட்ட ஆசையும் காங்கிரஸைப் பிடித்து ஆட்டுவித்தன. அஸ்திவாரத்திலிருந்து கட்டிடம் எழுப்புவதற்குப் பதில் ஆகாயக் கோட்டை கட்ட ஆரம்பித்ததன் பலனை நாம் இன்று அனுபவித்து வருகிறோம். 'அடாடா! பட்டேல் இன்னும் சில காலமாவது இல்லாமல் போய் விட்டாரே' என்று விசனிக்கிறோம்.

இப்போதும்கூட அடியோடு குடிமுழுகிப் போய் விடவில்லை. தவறான பொருளாதாரக் கொள்கைகளை விட்டொழித்து ஆட்சியைத் திறம்பட நடத்தினால் தேசம் நாளடைவில் ஆரோக்கிய வாழ்வு பெறும்.

ஆனால் அதற்கு ஒரு பட்டேல் தேவை. நேருஜியின் பக்கத்தில் இருந்துகொண்டு தயங்காமல் உண்மைகளைப் பட்டேல் உணர்த்தியது போல் இன்று இந்திரா அம்மையாருக்கு அருகிலும் இரும்பு உள்ளம் படைத்த ஒருவர் வேண்டும். கிடைப்பாரா? நாடு ஏங்குகிறது!

# தங்கத் தேர் வேண்டாமாம்!

சுவாமிமலை கோயிலில் முருகனுக்குத் தங்கத் தேர் செய்வதாக இருக்கும் யோசனையைக் கைவிடுமாறு முதல்வர் கேட்டுக் கொண்டிருக்கிறார். அந்தப் பணத்தை மக்களின் பிணி தீர்க்கவும் கல்வி வளர்ச்சிக்கும் பயன்படுத்துங்கள் என்று கோரியுள்ளார்.

இதே அளவுகோலை வள்ளுவர் கோட்டத்துக்கும் கட்டப் பொம்மன் கோட்டைக்கும் பூம்புகாருக்கும் பயன்படுத்தலாம் என்பது முதல்வருக்குப் புரியாமல் போனதுதான் விந்தை!

சுவாமிமலை முருகனுக்குத் தங்கத் தேர் செய்ய மக்கள் தரும் வரிப் பணம் செலவாகப் போவதில்லை. மக்கள் தாங்களாக மனமுவந்து இறைவனுக்கு அளிக்கும் காணிக்கைகளிலிருந்து கோயில் நிர்வாகிகள் தயாரிப்பார்கள். இதையே ஆட்சேபிக்கிறார் முதல்வர். ஆனால் அவரே மக்களைக் கசக்கிப் பிழிந்து வாங்கும் வரிப் பணத்தை அவர்களுக்கு நிரந்தர நலன் பயக்காத துறையில் செலவிட அனுமதி வழங்குகிறார். வள்ளுவர் கோட்டத்துக்கும் கட்டபொம்மன் கோட்டைக்கும் செலவழிப்பதற்குப் பதில் வேலை வாய்ப்புக்கள் நல்கும் தொழில் துறைகளில் முதலீடு செய்திருக்கலாம் அல்லது சமுதாய நலத் திட்டங்களுக்குப் பயன்படுத்தியிருக்கலாம் என்னும் வாதத்தில் உள்ள நியாயத்தை இப்போதாவது முதல்வர் உணர்ந்தால் சரி.

## தூங்கி வழியும் சம்மேளனம்!

ரேடியோ சங்கீத சம்மேளன் கனஜோராக அங்குரார்ப்பணம் ஆகியது. வடக்கேயிருந்து கலைஞர்களைத் தமிழகத்துக்குத் தருவித்தார்கள். தமிழகக் கலைஞர்களை பம்பாய்க்கும் திருவனந்தபுரத்துக்கும் அனுப்பினார்கள். ஒரே அமர்க்களம் போங்கள்!

கலைகள் மூலம் ஒருமைப்பாட்டை வளர்க்கிறார்களாம். இரவு பத்து மணிக்கு மேல், நள்ளிரவு வரையில்! அழகாயிருக்கிறதல்லவா? ஏற்கெனவே சோர்ந்து கிடக்கும் ஒருமைப்பாடு இனி தூங்கி வழியும்! அகில இந்திய ரேடியோவின் உபயம்!

டில்லியிலிருந்து ஒலிபரப்பப்படும் அந்தக் கச்சேரிகள்தாம் ஒழுங்காய்க் கேட்கின்றனவா என்றால் அதுவும் இல்லை. ஒரே கரபுரச் சத்தம். ரிகார்டிங் சரியாயிருந்தால், ஒலிபரப்பு சுகமில்லை. ஒலிபரப்பு சரியாயிருந்தால், ரிகார்டிங் மோசம். இரண்டும் சரியாக இருந்தாலோ வேளை கெட்ட வேளையில், தலை ஆடி விழக் கேட்க வேண்டியிருக்கிறது.

இப்படி ஒரு சம்மேளனம்! இதற்குச் செலவாவது மக்களின் வரிப் பணம்!

## அத்தன் அடி சேர்ந்த அக்தர்

பாடுபவர் பலருண்டு. பாட்டுவிக்கப்படுபவர் சிலரே. இவர்கள் பாடும்போதே, ஏதோ ஒரு மகா சக்தி இவர்களை இயக்குவிக்கிறது என்று நாம் உணர்ந்து உளம் கரைய முடியும். இப்படிப்பட்ட அபூர்வக் கலைஞர்களில் ஒருவராக நாற்பதாண்டுகள் சுடர் விட்டுப் பிரகாசித்தவர் பேகம் அக்தர். அத்தரைப்போல் மணம் வீசுகிற பரம சௌக்கியமான சங்கீதம் அவருடையது. ஹிந்துஸ்தானி சாஸ்திரீய இசையிலேயே மெல்லிசை மனோகரம் அதிகமாகத் தெரியும் தும்ரி, தாத்ரா இவைகளில் வல்லுநராக இருந்த பேகம் அக்தர் குறிப்பாக "கஜல் ராணி" என்றே போற்றப்பெற்றார். ஸூஃபி மகான்களும், மிர்ஸா காலிபும் இயற்றிய சிருங்கார ரச 'கஜல்'களை அமுத ரசமாகப் பண்ணில்



ராஜாஜி சிந்தனை

### நாணயத்தின் மதிப்பு நாசமாகிறது!

யுத்தத்துக்கு முந்தைய காலத்தில் வாழ்ந்தவர்களுக்குத் தெரியும் ரூபாயின் மதிப்பு, அன்றுஎப்படி இருந்தது இன்று எப்படி விழுந்து விட்டது என்று. 1939ல் ரூபாய்க்குப் பதினாறணா மதிப்பு. ஆனால் இன்று அதன் மதிப்பு மூன்றணாதான். வெள்ளியும் தங்கமும் விலை உயர்ந்துவிடவில்லை. ரூபாயின் மதிப்புத்தான் குறைந்து போயிற்று. நமது நாணயத்தின் மதிப்புக் குறைவையே வெள்ளி, தங்கத்தின் விலை உயர்வு சுட்டிக் காட்டுகிறது.

தொழில் அல்லது வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள ஒருவர் திவாலா நிலை அடைந்தால் அந்த நிறுவனத்தின் பங்குதாரர்களும் கடன் கொடுத்தவர்களும் முதலீட்டை இழப்பார்கள். ஆனால் அது நாட்டில் புழங்கும் பணத்தின் மதிப்பைப் பாழாக்கி விடுவதில்லை. தன் கடனை அடைக்க வியாபாரியால் பணத்தை உற்பத்தி செய்ய முடியாது. ஆனால் புதுதில்லி அரசு பணம் உற்பத்தி செய்கிறது. மேலே மேலே கடன்பட்டு மேலே மேலே பணம் அச்சடித்துப் புழங்க விடும்போது பொதுமக்களுடைய பணத்தின் மதிப்பு நாசமாகிறது.

சுயராஜ்யா, ஜூலை 7, 1962

அமைத்துக் கோடானு கோடி மக்களைப் பரவசப்படுத்தினர் பேகம் அக்தர். அவரது கருதிலயமான சாரீரமும், பண்ணிலும் பாடல் பொருளிலும் அவர் ஊறி ஊறிக் கானம் செய்த பாவமும் ரசிகர் மனத்தில் என்றும் சுழன்று சுழன்று ரீங்காரமிட்டபடி இருக்கும்.

சமீபத்தில் பேகம் அக்தர் சென்னைக்கு விஜயம் செய்தபோது ஸ்ரீமதி எம். எஸ் தமது இல்லத்தில் அவருக்கு விருந்துபசாரம் நிகழ்த்திப் பொன்னாடை அணிவித்து அக மகிழ்ந்தார். பூரித்துப்போன பேகம் அக்தர், ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்குத் தாமே கஜல்களைக் கற்பிக்க விரும்புவதாக ஆர்வமுடன் கூறினர். இறைவன் திருவுள்ளம் வேறு விதமாக இருந்து விட்டது. அநாயாசமாகப் பாடி அவனை ஆராதித்துவந்த அக்தரை அநாயாச மரணத்தின் மூலம் ஆண்டவன் தன்னிடமே அழைத்துக் கொண்டு விட்டான்.

## அரசியலல்ல; அநாகரிகம்!

தென்னாப்பிரிக்காவுடன் டேவிஸ் கோப்பை இறுதி ஆட்டத்தில் இந்தியா விளையாடுவதில்லை என்பதாகத் தீர்மானித்துவிட்டது. தென்னாப்பிரிக்க அரசு இன்னமும் நிற வேற்றுமையை அனுமதிக்கிறது என்பதே இந்த முடிவுக்குக் காரணம். கறுப்பு, பழுப்புத் தோல் படைத்தவர்கள் தாழ்ந்த ஜாதி என்ற எண்ணம் இன்னமும் அங்கு நிலவுகிறது!

விளையாட்டு விஷயத்தில் அரசியலைப் புக விடக் கூடாது என்பதாகக் கூறி இந்தியாவின் இந்த முடிவை ஆட்சேபிப்பவர் உண்டு. ஆனால் நிற வேற்றுமை பாராட்டுவதென்பது அரசியலுக்கு அப்பாற்பட்ட விஷயம். அது அரசியலே இல்லை; அநாகரிகம். நாகரிகம் அடைந்த எவரும் நிற வேற்றுமை பாராட்டும் அநாகரிகப் போக்குடையவர்களுடன் பழகவே கூசுவார்கள்.

விளையாட்டு அரங்கத்தில் நாம் அரசியலைப் புக விடுவதில்லை என்பதையும் அண்மையில் நிரூபித்திருக்கிறோம். பெரும்பாலும் பாகிஸ்தானிய ஆட்டக்காரர்களைக் கொண்டிருக்கும் ஆசிய நட்சத்திர ஹாக்கி குழுவுடன் இந்திய ஹாக்கி கோஷ்டி இந்தியாவின் பல நகரங்களில் விளையாடியிருக்கிறது.

பாகிஸ்தானிய ஆட்டக்காரர்களுக்குச் சலாம் செய்து நமது பிரதமர் முகமன் கூறும் படம் பல நாளிதழ்களில் வெளியாகியிருக்கிறது.

## அதிர்ச்சி தரும் அரசாங்க மருத்துவ மனை

சென்னை அரசாங்க பொது மருத்துவ மனையில் சஸ்திர சிகித்சை நடக்கும் பகுதியில் நிலவும் படுமோசமான சூழல் பற்றிய அறிஞர் குழுவின் அறிக்கை அதிர்ச்சி அளிப்பதாய் இருக்கிறது.

இத்தகைய பயங்கரச் சூழலில் சில ஆப்பரேஷன்கள் வெற்றிகரமாகக்கூட நடக்கின்றனவே என்று ஆச்சரியப்படவும் செய்கிறது; மக்களுக்கு மருத்துவர்களிடம் இருக்கக்கூடிய



நம்பிக்கையைத் தகர்க்கும் விசனிக்கத்தக்க நிலைமை.

ஆப்பரேஷன் தியேட்டர்களில் நோய்க் கிருமிகள் புகாவண்ணம் எவ்வளவு சர்வஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும் என்பது டாக்டர்களும் ஆஸ்பத்திரி நிர்வாகிகளும் அறியாத விஷயமல்ல. இருந்தும் இந்நாள் வரை இது விஷயத்தில் காட்டப்பட்டு வந்துள்ள அலட்சியம் இங்கு மனித உயிர்கள் மலிவுச் சரக்காகி விட்டதையே உணர்த்துகிறது.

ஆபரேஷனுக்குப் பிறகு பல நோயாளிகள் டெட்டனஸ் எனப்படும் பயங்கர நோயால் பாதிக்கப்படுவதைப் பார்த்தபின்தான் விழித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது ஏற்பட்டுள்ள இந்த விழிப்பு உணர்ச்சியாவது நிலைத்திருக்கட்டும்.

அடிப்படையான சுகாதார ஏற்பாடுகளுக்குக்கூட நமது மருத்துவமனைகளில் பஞ்சம் என்பது அங்கிருந்துவிட்டு வந்தவர்களுக்கு நன்கு தெரியும். உடம்பு குணமாகாவிட்டால் போகிறது, புதிதாக வியாதி ஏதும் தொத்திக் கொள்ளாதிருந்தால் சரி என்று எண்ணுமளவுக்குச் சுகாதார ஏற்பாடுகள் படுமோசம்.

அது போக இப்போது ஆபரேஷன் தியேட்டர்களின் லட்சணம் அம்பலமாகியிருக்கிறது.

'எல்லாம் அதிகாரிகள் செய்யும் தவறு. மந்திரி எப்படிப் பொறுப்பாக முடியும்? என் மீது குற்றம் இருப்பதாக நிரூபித்துக் காட்டினால் ராஜிநாமா செய்யத் தயார்! ஆனால் குற்றம் ருசுவாகாது போனால் குற்றம் சுமத்தியவர் தண்டனை பெற வேண்டும்?' என்று நமது சுகாதார அமைச்சர் முதல்வர் பாணியில் கூறக் கூடும்!

# துக்கடா

சுதேச மன்னர்களின் தேசபக்த உணர்வைத் தட்டி எழுப்பி, இந்திய ஒருமைப்பாட்டுக்கும் ஜனநாயகத்துக்கும் பணியச் செய்தது அவரது (பட்டேலின்) மேதையைக் காட்டுகிறது. அவர்கள் ஓரளவு நிம்மதியுடன் வாழ்வதற்காக அளிக்கப்பட்ட மானியங்களைத் தர மறுக்கலாகாது என்பதற்காக அரசியல் சாஸனத்தில் அதற்குப் பாதுகாப்பு கொடுத்தார் பட்டேல். ஆனால் காலத்துக்கு ஒவ்வாதது என்று சொல்லி அவற்றைப் பறித்துவிட்ட பிரதமர் இந்திரா காந்தி, தமது ஆட்சியில் உருவாக்கி வரும் புது வகை மன்னர்களையும் அவர்களது ஊழல்களையும் பற்றிக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

தலையங்கம் — தினமணி

கடத்தல் கொள்ளையால் கோடிக் கணக்கில் சம்பாதித்து நாட்டின் பொருளாதார நிலைமையே சீர்குலைத்த பேர்வழிகளின் சொத்துக்களின் மீது வரி விதிக்க மத்திய சர்க்கார் உத்தேசித்து வருவதாக ஒரு செய்தி வெளியாகியுள்ளது.

இது உண்மையானால் கடத்தல் பேர்வழிகளின் தேச விரோதச் செயல்களுக்குச் சர்க்காரே சலுகை காட்டுவது போலாகும்.

தலையங்கம் - நவசக்தி

ஹரியானாவைச் சேர்ந்த ஐம்பதினாயிரம் கிராம மக்கள் சென்ற 20–10–74 அன்று கூடி, கல்யாணங்களில் ஆடம்பரமாகச் செலவழிக்கும் வழக்கத்தை விட்டொழிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். இந்த முடிவினை ஒட்டி எட்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அவற்றில் சில: நிச்சயதார்த்தத்தில் மாப்பிள்ளைக்கு வரதட்சிணையாக ஒரே ஒரு ரூபாய் தான் தர வேண்டும்; அடுத்த ''ஷகுன்'' என்ற நிகழ்ச்சியின் போது, ஒன்றே கால் ரூபாய்க்கு மேல் இனிப்புக்கள் வாங்கி வழங்கக் கூடாது; கல்யாணத்தின் போது பதினொரு விருந்தினர்களுக்கு மேல் அழைக்கக் கூடாது; பாண்டு முதலிய வாத்திய கோஷங்கள் கூடாது.

— ஹிந்துஸ்தான் டைம்ஸ்

---

## சிவப்புச் சிரிப்புக்கள்

★ பீகிங்கில் ஒரு கம்யூனிஸ்ட் கட்சித் தொண்டரும் சாதாரணக் குடிமகனும் மீன் பிடிக்கச் சென்றார்கள்.

கட்சித் தொண்டர் ஒரு மீன்கூடப் பிடிக்கவில்லை. குடிமகனோ கூடை கூடையாகப் பிடித்துக் கொண்டிருந்தார்.

''என் தூண்டிலில் ஏன் ஒரு மீன்கூடச் சிக்கவில்லை?'' என்று கட்சித் தொண்டர் கேட்டார்.

''உங்கள் கோட்டில் இருக்கும் கட்சி பாட்ஜை மீன்கள் பார்த்துவிடுகின்றன. அதனால் வாயைத் திறப்பதற்கே அவைகளுக்குப் பயம்!''

★ வார்சா வீட்டு வசதி வாரிய அதிகாரி அறிக்கை ஒன்றில் குறிப்பிட்டார்: ''நாங்கள் இருபத்துமூன்று மில்லியன் செங்கற்களையும் ஐந்து லட்சம் கண்ணாடிகளையும் 13 லட்சம் வேலை நேரங்களையும் மிச்சம் பிடித்திருக்கிறோம்.''

வாரியத் தலைவர் கேட்டார். ''ரொம்ப மகிழ்ச்சி. மொத்தம் எவ்வளவு வீடு கட்டினீர்கள்?''

''வீடா? ஒன்றுகூட இல்லையே. அதனால்தான் இவ்வளவு மிச்சம்!''




★ அமைதி ஒப்பந்தத்தில் கையெழுத்து இடுமுன் குருஷ்சேவ் கென்னடியை, முதல் மனிதர்களான ஆதாம், ஏவாளைக் கம்யூனிஸ்டுகள் என்று ஒப்புக் கொள்ளும்படி வற்புறுத்தினாராம்.

சங்கடமடைந்த கென்னடி, பைபிள் அத்தாட்சியான பென்குரியனைக் கேட்டார்.

அதற்கு குரியனின் பதில்: ''நீங்கள் தாராளமாக ஆதாம் ஏவாளை கம்யூனிஸ்டுகள் என்று கருதலாம். ஏனென்றால் அவர்களிடம் அணிய ஆடைகள் இல்லை. ஆப்பிளைத் தவிர சாப்பிட வேறொன்றும் கிடையாது. அப்படி இருந்தும் அவர்கள் சுவர்க்கத்திலிருப்பதாகக் கனவு கண்டு கொண்டிருந்தார்கள்!''

தகவல்: ''ஜம்புநாத்''
ஆதாரம்: காரவான்

# 2 ஃபாஸ்ஃபோமின் டானிக்...









## ஃபாஸ்ஃபோமின் அயன்

**பெண்களுக்கான**
**அயன் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்து மிக்க சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன்-சக்தியையும் பெருக்குகிறது. பெண்களுக்கான ஃபாஸ்ஃபோமின் அயனைத் தவறுமல் தினம் உட்கொள்ளுங்கள்.

## ஃபாஸ்ஃபோமின் விடமின்

**குடும்பத்திற்கான**
**விடமின் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் குடும்ப ஆரோக்கியத்திற்குத் தேவையான விடமின் பி காம்ப்ளெக்ஸ் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கிய விடமின் டானிக்காகும்.

குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ 2 **ஃபாஸ்ஃபோமின்** டானிக்

ஃபாஸ்ஃபோமின் அளிக்கும் இரு டானிக்குகளும் பசியைத் தூண்டி, வலிவைப் பெருக்கி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுவனவாகும்.

SQUIBB® SARABHAI CHEMICALS LTD.

SHILPI SC 8A/74 TAM

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை 3-00 -- 6-00 | பாம்பே நூதன் லாட்ஜில் தங்குவர், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் சப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை 3 - 5 | |
| ,, செவ்வாய் பேட்டை | 16 | மாலை 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்டஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு. திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை 3-00 -- 5-00 | M/s. அல்லயன்ஸ் கம்பெனி, 156, ராமகிருஷ்ண மடம் ரோடு (மேற்கு மாட வீதி) மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை 10-00 -- 11-00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சீப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை 5-00 -- 6-00 | மீனாட்சி டுபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ண மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை 8-00 -- 11-00 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், டிபாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை 3-00 -- 4-00 | பாரதிய ஆயுர்வேத அமிர்த நிலையம், கமலேஸ்வரன் கோயில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி |
| பெங்களூர்-3 | 26 | காலை 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை 3 - 5 | |

குறிப்பு: சென்னை, மைலாப்பூரில் எமது டாக்டர் 20ந் தேதி மாலை தங்கும் இடம்:

M/s. அல்லயன்ஸ் கம்பெனி, ராமகிருஷ்ண மடம் தெரு, (மேற்கு மாட வீதி) மைலாப்பூர்

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை, கரூர் (போன்: 87) திருச்சி ஜில்லா

# மகாலக்ஷ்மி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்



பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்றார் திருவள்ளுவர். எல்லோரும் வீடு வாசலை விட்டு விட்டு ஆத்ம விசாரத்தில் ஈடுபட முடியாது. உலக வாழ்க்கையை நடத்துவதானால் பணம் வேண்டித்தான் இருக்கிறது. இப்படிச் சம்பாதித்துக் குடும்பம் நடத்துபவர்கள் இருப்பதனால்தான் வேறு சிலர் ஆத்ம விசாரம் செய்ய முடிகிறது. இந்தக் கிருஹஸ்தர்கள்தான் ஆத்ம விசாரத்தில் ஈடுபட்ட சந்நியாசிகளுக்கு பிக்ஷை அளித்து அவர்களை ரட்சிக்கிறார்கள். "பொருள் (பணம்) என்பது பொருள் இல்லாதது" (அர்த்தம் அனர்த்தம்) என்று சொன்ன அதே ஆதி சங்கராசாரியாள், அதே "பஜ கோவிந்த"த்தில் "பணப் பேராசை பிடித்து அலையாதே! ஆனால் உனக்கு உரிய கர்மத்தினால் நீ சம்பாதிக்கிற பொருளைக் கொண்டு நியாயமாக வாழ்ந்து உன்னையே உயர்த்திக்கொள்" என்கிறார்.

செல்வத்துக்கு அதி தேவதையாக இருக்கப்பட்டவள் மகாலக்ஷ்மி. அவளைப் பிரார்த்தித்தால் நமக்குத் தர்ம நியாயமாக வேண்டிய சம்பத்தைத் தந்து அநுக்கிரகம் செய்வாள். ஞான, வைராக்கியக் கிரந்தங்களை நிறையச் செய்த ஸ்ரீ ஆசாரியாள் தம்முடைய பரம காருண்யத்தால் விவகார தசையிலுள்ள லோக ஜனங்களை உத்தேசித்து அவர்கள் மகாலக்ஷ்மியை எப்படிப் பிரார்த்திக்க வேண்டும் என்று சொல்லிக் கொடுக்கிற மாதிரி, "கனகதாரா ஸ்தவம்" என்ற லக்ஷ்மீபரமான ஸ்தோத்திரத்தை நமக்கு அநுக்கிரகித்திருக்கிறார்.



இந்தக் "கனகதாரா ஸ்தவம்" உண்டானதற்கு ஒரு கதை உண்டு. ஆசாரியாள் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு முற்பட்ட கதை அது. அவர் பால தசையில் பிரம்மசாரியாகக் குருகுலவாசம் செய்து வீடு வீடாகப் போய் பிக்ஷை வாங்கி வந்த சமயம். ஒரு துவாதசியன்று பரம தரித்திரன் ஒருவனின் வீட்டுக்குப் பிக்ஷைக்காகப் போனார். அவனுக்கு அநுக்கிரகம் பண்ணவே போனார் போலிருக்கிறது! இவர் போனபோது உஞ்சவிருத்திப் பிராமணனாகிய வீட்டுக்காரன் வீட்டில் இல்லை. பத்தினி மட்டும் இருந்தாள். இவரைப் பார்த்த மாத்திரத்தில், "அடடா, எப்படிப்பட்ட தேஜஸ்வியான பிரம்மச்சாரி! இவருக்குப் பிக்ஷை போட்டால் சகல புண்ணியமும் உண்டாகும்" என்று நினைத்தாள். ஆனால் பிக்ஷை போடத்தான் வீட்டில் ஒரு மணி அரிசிகூட இல்லை. தேடித் தேடிப் பார்த்ததில் ஒரு புரையில் அழுகல் நெல்லிக்காய் ஒன்று அகப்பட்டது. துவாதசிப் பாரணைக்காக அவள் புருஷன் 'சேமித்து' வைத்திருந்த நெல்லி! "போயும் போயும் இதையா அந்தத் தெய்வக் குழந்தைக்குப் போடுவது!" என்று ரொம்பவும் மனசு குமுறி வேதனைப்பட்டாள். ஆனால் "பவதி பிக்ஷாம் தேஹி" என்று கேட்டுவிட்ட பிரம்மச்சாரியை வெறுமே திருப்பி அனுப்பக் கூடாது என்பதால், சொல்லி முடியாத வெட்கத்தோடும், அழுகையோடும் அந்த அழுகல் நெல்லிக் கனியை ஆசாரியாளுக்குப் போட்டாள்.

பொருளில் தரித்திரமாக இருந்தாலும், அவளுடைய மனசு எத்தனை பெரியது என்பதையும், அவளுக்குத் தன்னிடம் எத்தனை அன்பு பொங்குகிறது என்பதையும் ஆசாரியாள் கண்டுகொண்டார். அவர் மனசும் அவளுக்காக உருகிற்று. உடனேதான் அவளுக்காக மஹாலக்ஷ்மியைப் பிரார்த்தித்து, "கனகதாரா ஸ்தனம்" பாடினார்.



# "காரிடாஸ்" அரங்கழும்

“ஹாங்காங்கில் விமானம் இறங்கும் போது கண்ணாடி ஜன்னல் வழியாகக் கீழே பார்த்துவிடக் கூடாது! தப்பித் தவறிக் கவனம் அப்படிச் சென்று விட்டால் குலைநடுக்கம் ஏற்பட்டுவிடும்'' என்றார் ஸ்ரீமதி ராதா விசுவநாதன். தொடர்ந்து அவரே காரணத்தையும் சொன்னார் : ''குன்றுகளும் பள்ளத்தாக்குகளும் நிரம்பிய சிறு தீவு ஹாங்காங். நாலாபுறமும் மலைகள் சூழ்ந்திருக்க, கடல் அலைகள் பொங்கி வடிந்து கொண்டிருக்க, இதற்கு மத்தியில் விமான தளத்தின் ரன்வே சின்னதாகத் தெரியும். 'மலைகளில் முட்டி மோதிக் கொள்ளாமல் விமானம் எப்படி இறங்க முடியும்?' என்று தோன்றும். உண்மையும் அதுதான். லிங்கச் செட்டித் தெருவில் லிங்கன் காண்டினென்டலை ஓட்டுவதுபோல் அவ்வளவு சிரமமான காரியம் தான் ஹாங்காங் விமான தளத்தில் ஜம்போ போன்ற பிரும்மாண்டமான விமானங்களை இறக்குவது. ஏறுவதைவிட இறங்குவதில் ஆபத்து அதிகம். ரொம்ப அனுபவம் பெற்ற விமானிகளைத்தான் இந்தப் பகுதியில் அனுப்புவார்கள்.''



- தாய்லாந்து நடனம்.
- மிதக்கும் பஜார்.
- ஹாங்காங்கில் குட்டிக் கப்பல் பயணம். சதாசிவம் தம்பதிக்குப் பக்கத்தில் கிரிஜா. மேலே கமலா ராஜகோபாலனும், ராதா விசுவநாதனும்.

ஹாங்காங்கில் உள்ள இந்தியத் தூதர் யார் என்பதை அறிந்தால் தமிழ் எழுத்தாளர்கள் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து பெருமிதத்துடன் ஒரு கனைப்புச் செய்வார்கள்! தமிழ் நாவலின் தந்தை எனக் கருதப்படும் அ. மாதவய்யா அவர்களின் பேரன்தான்! தாத்தாவின் பெயரையே பூண்டிருக்கிறார் மாதவன் என்று. நமது உயர்நீதி மன்ற பிரதம நீதிபதியாக அண்மைக் காலம் வரையில் விளங்கிய எம். அனந்தநாராயணன் அவர்களின் புதல்வர்.

''மாதவன் அவர்கள் இல்லத்தில்தான் தங்கியிருந்தோம். அவரும் அவரது மனைவி கிரிஜாவும் ரொம்பப் பிரியமாய் இருந்தார்கள். கிரிஜா பார்ப்பதற்கு மட்டுமின்றிப் பழகுவதற்கும் இனிமையானவர். அயல்நாடுகளில் நமது தூதரகங்களின் வாசல்கள் எல்லாவற்றிலும் 'சத்தியமேவ ஜயதே' என்ற அரசுச் சின்னத்தின் வாசகம் பெரிய எழுத்துக்களில் காணப்படும்.

'' 'சத்தியமாகச் சொல்லிவிட்டேன், மோகனம் பாடித்தான் ஆக வேண்டும்' என்றார்



மாதவன், அம்மாவிடம். தமது அப்பாவைப் போலவே இவருக்கும் சங்கீதத்தில் கொள்ளை ஆசை. சிறந்த ரசிகர். மோகனம்தான் உயிராம். அன்று அம்மாவின் மோகனத்துக்கு இரண்டு இடங்களில் அப்ளாஸ் என்றால் சங்கராபரணத்துக்கு மூன்று தடவை கரகோஷம்! சக்கைப்போடாக இருந்தது'' என்றார் ஸ்ரீமதி ராதா விசுவநாதன்.

கச்சேரி காரிடாஸ் ஹாலுவல் என்னும் ஓர் அரங்கில் நடைபெற்றது. காரிடாஸ் என்பது லத்தீன் வார்த்தை. நம்பிக்கை, ஈகை, அன்பு என்று ஒன்றுக்கொன்று தொடர்பான அர்த்தங்கள் அந்தச் சொல்லுக்கு உண்டு. ஸ்ரீமதி எம். எஸ்ஸின் இன்னிசை இந்தப்

# “ஏரவான்” ஹோட்டலும்

பெயர் கொண்ட அரங்கில் பெருக்கெடுத்தது மிகப் பொருத்தம்தானே!

''ஹாங்காங்கில் ஷாப்பிங் போயிருப்பீர்களே!'' என்று கேட்டோம்.

''ஓ, போனேனே!'' என்றார் ஸ்ரீமதி ராதா. ஹாங்காங் ஒரு ஃப்ரீ போர்ட் (சுங்க வரிகள் இடையாது) என்பதால் எல்லாம் மலிவாக இருக்கும் என்று எண்ணுகிறார்கள். இது வாஸ்தவம்தான் என்றாலும் அண்மைக் காலமாக இங்கு ஏமாற்றுதல்களும் அதிகமாகி வருகின்றன. அதனால் எதற்கும் பேரம் பேசியாக வேண்டும். ஆனால் எனக்கு அதைப் பற்றியெல்லாம் கவலை இல்லை. ஏராளமாய்ச் சாமான்களை வாங்கிக் குவிப்பவர்களுக்குத் தானே ஏமாந்து விடுவோமோ என்ற விசாரமெல்லாம்! இந்தக் கிழக்கிந்தியச் சுற்றுப் பயணத்தின்போது அப்பா ஒப்புக் கொண்ட கச்சேரிகள் எல்லாமே நேசப் பான்மையையும் நல்லெண்ணத்தையும் வளர்க்கும் நோக்கில்தான். அதில் பைசா விவகாரம் புகுவதற்கு இடமே இடையாது. எனவே என்னுடைய ஷாப்பிங்கும் பெரும்பாலும் விண்டோ ஷாப்பிங்காகவே முடிந்தது. வகைக்கு ஒன்றாகப் பல கடைகளுள் நுழைந்து எல்லாவற்றையும் ஆசை தீரப் பார்த்துவிட்டு வந்தேன்.''

ஹாங்காங்கில் வாழும் வர்த்தகர் ஹரிலீலா இவர்களைத் தமது குட்டிக் கப்பலில் ஏற்றிக் கொண்டு கடலோரமாகச் சுற்றிக் காண்பித்தார். கரையோரமாகச் சிறு சிறு படகு வீடுகளில் வசிக்கும் குடும்பங்களைப் பார்த்தார்கள். வருஷக் கணக்கில் நாற்பது ஐம்பது வருஷங்கள்கூட — படகிலேயே வசிக்கும் சீனர்கள் இவர்கள். அதிலேயே சமையல் சாப்பாடு, வியாபாரம் அல்லது





- ஹாங்காங்கில் உள்ள ஏராளமான படகு வீடுகளுள்ள ஒரு பகுதி.
- பாங்காக் அரண்மனை.

தொழில், கல்யாணம், பண்டிகை, பிறப்பு, இறப்பு எல்லாம் நடக்கும்.

ஹாங்காங்வாசிகளுள் பெரும்பாலோர் சீனர்களே. கம்யூனிஸ கிழக்கு ஜெர்மனியிலிருந்து சுதந்திர வாழ்வை நாடித் தப்பி ஓடுவோருக்கு மேற்கு பெர்லின் நுழை வாயிலாக அமைவதுபோல் கம்யூனிஸ்ட் சீனத்திலிருந்து தப்பி வருவோருக்கு ஹாங்காங் தான் சுதந்திர வாழ்க்கைக்கு நுழைவாயில்.

* * *

"பாங்காக்கில் நாங்கள் ஹோட்டல் ஐராவதத்தில் தங்கியிருந்தோம்" என்றார் ஸ்ரீமதி ராதா.

"ஐராவதமா?" என்று வியப்புடன் வினவியபோது அவர் சிரித்துக் கொண்டே, "எரவான் ஹோட்டல் என்பது அதற்குப் பெயர். எரவான் என்றால் ஐராவதம் என்று தான் அர்த்தம். கடல் கடந்து போய்க் குடியேறியுள்ள நமது பண்பாடுகளையும் கலாச்சாரங்களையும் தாய்லாந்தில் கொஞ்சம் கொஞ்சம் உருமாறிய நிலையில் நிரம்பக் காணலாம். தாய்லாந்து மக்கள் ரொம்பவும் தெய்வ பக்தி உள்ளவர்கள். பாங்காக்கில் மட்டும் 2100 கோயில்கள் உள்ளன. புத்தர் கோயில்களைத் தவிர பிரும்மாவுக்கும் இங்கு கோயில் உண்டு. இந்தியாவில் பிரும்மாவைத் தொழுவதை நாம் அநேகமாக விட்டு விட்டோம். ஆனால் அந்தப் பழக்கத்தைத் தாய்லாந்துக்காரர்கள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டனர். வீட்டில் சமைப்பதைச் சிறிது கோயிலில் கொண்டு வந்து வைத்து நைவேத்தியம் செய்கின்றனர். எரவான் ஹோட்டல் முகப்பில்கூட பிரும்மாவுக்குக் கோயில் உண்டு. அந்த ஹோட்டலை நிர்மாணிக்க ஆரம்பித்த போது நிர்வாகத்தினர் பல தொல்லைகளுக்கு உள்ளானார்களாம். ரொம்ப மாடர்ன் ஹோட்டலானாலும் பாதகமில்லை என்று வாசலிலேயே பிரும்மாவுக்குக் கோயில் எடுப்பதாகப் பிரார்த்தித்துக் கொண்டார்கள். சிரமங்கள் நீங்கி ஹோட்டல் மளமளவென்று உருவாயிற்று. வீடுகளிலும் சரி, மற்றப் பொது இடங்களிலும் சரி, 'ஸ்பிரிட் ஹவுஸ்' என்பதாக ஒரு குட்டிக் கோயில் கட்டியிருக்கிறார்கள். அதில் தங்க நிறத்தில் ஒரு தேவதை இருக்கும். காக்கும் தெய்வம் அது. நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகக் கட்டப்பட்ட மாரியம்மன் கோயிலும் பாங்காக்கில் உண்டு. இங்கே தமிழர், இந்தியர் மட்டுமின்றித் தாய் மக்களுங்கூட வந்து கும்பிடுகிறார்கள்."

"பாங்காக்கிலும் வழக்கம் போல் விண்டோ ஷாப்பிங் பண்ணியிருப்பீர்களே" என்று கேட்டபோது ராதா விசுவநாதன் புன்னகையுடன் சொன்னார்: "பாங்காக்கில் வெளியே கிளம்புவதென்றாலே போராட்டம் தான். காரில் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குப் போவதற்குள் போதும் போதும் என்றாகிவிடுகிறது. அத்தனை போக்குவரத்து நெரிசல். சென்னை பல்லவா போக்குவரத்து டிரைவர்களும் டாக்ஸி ஓட்டிகளும் பாங்காக் காரோட்டிகளிடம் பிச்சை வாங்க வேண்டும். உலகிலேயே மிக மோசமான சாலைப் பண்பாடு உடையது என்று பாங்காக் தன்னிகரில்லாப் பெருமை பெற்றுள்ளது."

இதற்குப் பயந்து கொண்டு அவர்கள் ஹோட்டலிலேயே இருந்துவிடவும் இல்லை. அப்படி இருக்க நண்பர்கள் அனுமதிக்கவும் இல்லை. காலைக் காப்பி மட்டும்தான் ஹோட்டலில். மற்ற வேளை ஆகாரங்களெல்லாம் ஒன்று நண்பர்கள் வீட்டில் நடக்கும்; அல்லது நண்பர்கள் ஹோட்டல் அறைக்கே கொண்டு வந்துவிடுவார்கள்!

"திரு டி. வி. விசுவநாதன், பாலகிருஷ்ணன், ஏர் இந்தியா பணிக்கர், சுந்தரம் போன்ற பல நண்பர்களின் அன்பு இந்தச்

---

### ஐரோப்பிய அதிசயம்!

நம்மைவிட அதிகமாக மிளகாய் சாப்பிடுபவர்கள் ருமேனியர்கள். பச்சை மிளகாயைக் கொஞ்சமும் பதறாமல் நறநறவென்று கடித்தே சாப்பிடுவார்கள்.

-டைம்ஸ் ஆஃப் இந்தியா





### நெப்போலியன் பழக்கம்

அலுமினியம் கண்டுபிடிக்கப்பட்ட காலத்தில் அது வெள்ளியை விட அதிக விலை. ஆகவே நெப்போலியன் விருந்து கொடுத்தால் மற்றவர்கள் வெள்ளி ஸ்பூனால் சாப்பிடும்போது, தாம் மட்டும் அலுமினிய ஸ்பூனால் சாப்பிடுவாராம்.

-ஸயன்ஸ் டுடே

### யோசனை

இங்கிலாந்து நாட்டில் ரொட்டி, பிஸ்கட் இவற்றைச் சுற்றும் தாள்கள் மீது விளம்பரம் செய்யப் போகிறார்கள். இதனால் ரொட்டி விலை குறையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. நமது நாட்டிலும் இப்படிச் செய்யலாமே!

டிட்பிட்ஸ் - தகவல்: பாலி



# கொசுக்களின் பிடுங்கல் தீருமா என்று தவித்தோம்...



# டார்ட்டாய்ஸ்
## கொசுவர்த்திச் சுருள்
(TORTOISE MOSQUITO COIL)

**வாங்கினோமோ பிழைத்தோம்...**

**சரிவர உபயோகித்தால் சிறந்த பயன்.**



பத்து சுருள்கள் அடங்கிய பெட்டியிலிருந்து ஓர் இரட்டைச் சுருளை எடுத்து ஒன்றின் வளைகொம்பு முனையை இரு விரல்களுக்கிடையே பிடித்துக் கொண்டு... மெல்லப் பிரித்தேன்.



கதவுகள் ஜன்னல்களை எல்லாம் மூடிய பின் சுருளை அதற்கான ஸ்டாண்டு ஒன்றின் மீது பொருத்தி, தரை மீது ஒரு மூலையில் வைத்துப் பற்ற வைத்தேன் 20 நிமிடங்கள் கழித்து இலேசான அதன் புகை பரவிய பின்... ஒரு ஜன்னல் கதவைத் திறந்தேன். பறந்தோடின கொசுக்கள் வெளியே!



மலேரியா, ஃபிலேரியாக் காய்ச்சலைத் தடுக்கும் பொருட்டு சிபாரிசு செய்யப்படுகிறது இது— கொசுக்கடியே இனி இராது. ஆட்கள் நிரம்பிய ஓர் அறைக்கு ஒற்றைச் சுருளே போதும். 8 மணி நேரம் புகை பரப்பும். குழந்தைகளுக்குத் தீங்கற்றது.



இவ் வகையான சுருள்கள் ஜப்பான், ஹாங்காங், சிங்கப்பூர், கானடா நாடுகளில் பெயர் பெற்றுள்ளன. அதிசயமென்ன, நயமான விலையிலே... நல்ல பயன் தருபவை. இப்போதெல்லாம் கொசுத் தொல்லையே இல்லாமல் நிம்மதியாகத் தூங்குகிறோம்.

டார்ட்டாய்ஸ்-இந்தியாவிலே இதன் வகையில் ஒன்றே ஒன்றான கொசு விரட்டி



**இன்று மேலும் பயன் தருமாறு மேம்படுத்தப் பட்டுள்ளது.**



தயாரிப்பாளர்கள் :
**பாம்பே கெமிக்கல்ஸ் பிரை. லிட்.**
மானெக்ஜி வாடியா பில்டிங்,
129, மகாத்மா காந்தி ரோடு,
ஃபோர்ட், பம்பாய் 400001. போன் : 25197[illegible]

everest/770/BCL-tm

தமிழ்நாட்டுக்கு விநியோகஸ்தர்கள் :
**M/s. கே. என். & சன்ஸ்,**
நெ. 1, விருபாக்ஷீஸ்வரர் கோவில் தெரு, மைலாப்பூர், சென்னை - 600 004 (தமிழ்நாடு)

இதோ லதாவிடம் காணுவீர்!

# நீங்கள் பெற விரும்பும் அழகு

"லக்ஸ் ஸுப்ரீம் உபயோகிக்கும்போது
இவ்வுலகின் எழில் மிகுந்த நங்கை
நானே என்னும் எண்ணம் ஏற்படுகிறது.
அதன் செழுமையான, க்ரீம் இணைந்த நுரை
என் சருமத்தை மிருதுவாகவும்,
மினுமினுப்புடனும் வைக்கிறது. அதிலுள்ள
ப்யூடிக்ரீம் என் மேனியில் பட்டுப்போன்ற
ஸ்பரிசத்தை ஏற்படுத்துகிறது. அதன்
நறுமணமோ, மெய்மறக்கச் செய்கிறது"




## லக்ஸ் ஸுப்ரீம்

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் நயமான தயாரிப்பு

HT-HLLS-7702 (A)

சுற்றுப் பயணத்தில் எங்களைத் திக்குமுக்காட வைத்துவிட்டது'' என்றார் ஸ்ரீமதி ராதா.

''திருமதி விசுவநாதன் கல்கிக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதில் எம். எஸ்ஸின் பாட்டை எவ்வளவு ரசித்தோமோ அதே அளவுக்கு அவரது அடக்கத்தையும் எளிமையையும் இனிய சுபாவத்தையும் ரசித்தோம் என்று குறிப்பிட்டிருக்கிறார். கச்சேரி பாங்காக் பல்கலைக் கழகத்தில் அமெரிக்க உதவியுடன் உருவாகியுள்ள அரங்கத்தில் நடந்ததாமே?'' என்று வினவினோம்.

''ஆமாம்! பாங்காக்கில் உள்ள நமது தூதர் பண்டாரி, அம்மாவைப் பற்றிப் பத்து நிமிஷங்கள் பேசிய பிறகு கச்சேரி ஆரம்பமாயிற்று. பாட்டுக்குப் பாட்டு ரொம்ப ரசித்தார்கள்.

''பாங்காக்கில் உள்ள ஹிந்து கோயில் நிர்வாகத் தலைவர் அமர்நாத் கச்சேரி முடிவில் 'எங்கள் கோவிலுக்கு ஐந்து நிமிஷங்களாவது நீங்கள் நாளைக்கு வந்து போக வேண்டும்' என்று வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்.

'' 'கோயிலுக்கு வர வேண்டும் என்ற அழைப்பை யாராவது தட்டுவார்களா? தாராளமாக வருகிறோம்' என்று அப்பா சொல்லி விட்டார். இந்தச் செய்தி விடு விடு என்று பரவிச் சுமார் முந்நூறு பேர் கோவிலில் கூடிவிட்டார்கள், அம்மா பாடுவதைக் கேட்கலாம்என்ற ஆர்வத்துடன். அவர்கள்ஆசையை அம்மா பூர்த்தி செய்தாள். அரை மணி நேரம் பாடினாள். இங்கே அம்மா 'பஜரே யது நாதம்' போன்ற சில பாடல்களைப் பாடிய பின் நாமாவளிகளைக் கானம் செய்தபோது குழுமியிருந்தவர்களையும் திரும்பப் பாடச் சொன்னோம். கோவில் சூழலில் எல்லோரும் பஜனை பந்தாவில் பக்தி சிரத்தையுடன் பாடியது மெய்சிலிர்க்கும் அனுபவமாகஇருந்தது.''

இந்த ஹிந்துக் கோயிலில் எல்லா தெய்வங்களுக்கும் சலவைக்கல் சிலைகள் உள்ளன. இது தவிர புத்தர் கோவிலுக்கும் போனார்கள். பச்சைக் கல்லாலான மரகதப் புத்தர் தங்கத்தாலான புத்தர் எல்லாம் பார்த்தார்கள். தாய்லாந்து ராஜாவின் அரண்மனையின் ஒரு பகுதியைக் காணச் சுற்றுலாப் பயணிகள் அனுமதிக்கப்படுகிறார்கள். அங்கும் போய் வந்தார்கள். ஆனால் இதையெல்லாம் விட ராதாவுக்குப் பெரிய அதிசயமாகத் தோன்றியது 'டிம்லாண்ட்' என்ற இடம்தான். ஏனென்றால் நமக்கெல்லாம் அதிசயப்பட ஒன்றுமே இல்லாத விஷயங்களை அங்கு பெரியஅதிசயமாகக் காண்பித்தார்கள்! ஒரு பெண் முறத்தில் அரிசி புடைத்துக் கொண்டிருந்தாள்; இன்னொரு பெண் கூடை முடைந்து கொண்டிருந்தாள்; மற்றொருத்தி யந்திரத்தில் மாவரைத்துக் கொண்டிருந்தாள்! ஒருவன்கைத்தறியில் துணி நெய்தான். இன்னொருவன் மரப் பொம்மைகள் தயாரித்துக்கொண்டிருந்தான். யானைகள் மரங்களை உருட்டின; தும்பிக்கையால் தூக்கி அடுக்கின! சர்வ சாதாரணமாக நமக்குத் தோன்றுகிற இந்த விஷயங்களை மேனாட்டவர் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இந்த ரகசியத்தைத் தாய் மக்கள் புரிந்துகொண்டு செயல்படுகிறார்கள். பாங்காக்குக்கு வரும் அயல்நாட்டவர் கிராம மக்களின் வாழ்க்கையை அறிய அதிக தூரம் போக வேண்டாம். பாங்காக்கிலேயே 'டிம்லாண்'டில் பார்த்தறியலாம் என்று இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள். கட்டணம் வசூலித்துப் பணம் பண்ணவும் செய்கிறார்கள்.

''என்ன சாமர்த்தியம் பார்த்தீர்களா?'' என்று கேட்ட ஸ்ரீமதி ராதா விசுவநாதன் ஏறத்தாழ இதே மாதிரி ஓர் ஏற்பாடு மணிலா விமான நிலையத்துக்கு அருகிலும் (இரண்டாவது மைலில்) இருப்பதை நினைவு கூர்ந்தார். அதற்குக் 'குட்டி மணிலா' என்று பெயர். மணிலா மார்க்கமாகப் பல உலகத் தலைநகரங்களுக்குச் செல்வோர் இருப்பார்கள். இவர்களில் பலருக்கு மணிலாவில் தங்கிச் சுற்றிப் பார்க்க அவகாசம் இருக்காது. அப்படிப்பட்டவர்கள் விமானம் மீண்டும் புறப்படக் காத்திருக்கும் நேரத்தில் இந்த 'மினியேச்சர் மணிலா'வுக்குப் போய்த் திரும்பலாம். மணிலாவைப் பற்றி ஓரளவு அறிந்து கொண்டதாகவும் ஆகும். மணிலாவுக்குத் திரும்பவும் வரத் தூண்டுகோலாகவும் அமையும்.

டூரிஸ்ட்டுகளைக் கவர்ந்திழுக்க இப்படியெல்லாம் போட்டா போட்டியில் இறங்க வேண்டும் என்று உணர்த்திய ராதா, ''மைசூரின் தசரா போல் பாங்காக்கிலும் ஆண்டுக்கு ஒருமுறை ராஜ பவனி உண்டு. இதில் ராஜா மட்டுமே பங்கேற்பார்; ராணி வரமாட்டார். இதற்கு ஒரு விநோதக் கதையும் கூறுகிறார்கள்'' என்றார். ''ஒரு சமயம் ராஜாவும் ராணியும் சேர்ந்தாற்போல் யானை மீதேறிப் பவனி வந்தபோது பாங்காக்கில் ஏராளமாய் உள்ள கால்வாய்களுள் ஒன்றில் ராணி தவறிப் போய் விழுந்து மாண்டு போனாளாம்! அந்நாள் முதல் பட்டத்து ராணி பவனியில் கலந்துகொள்வதே இல்லையாம்!''

''கால்வாய் என்றதும் நினைவு வருகிறது. பாங்காக்கில் அது ரொம்ப விசேஷமாயிற்றே? 'மிதக்கும் பஜார்' என்று அழைப்பார்களே. நீங்கள் விசைப் படகேறிக் கால்வாய்களைச் சுற்றி வந்தீர்களா?'' என்று கேட்டோம்.

''அதைத்தான் உலகம் சுற்றும் வாலிபனில் நன்றாகப் பார்த்து விட்டோமே. அதனால் தான் போகவில்லை!'' என்றார் ராதா சிரித்துக் கொண்டே. ''மேலும் பாங்காக் வந்ததுமே 'இன்னும் மூன்று நாட்கள்தான், இரண்டு நாட்கள்தான் பாக்கி - குழந்தைகளைப் பார்க்க' என்று கணக்குப் போட ஆரம்பித்து விட்டேன்'' என்றார்.

ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கிழக்காசியச் சுற்றுப் பயணம் சென்னை திரும்பிய பிறகும் முடியவில்லை. பாராட்டு விழாக்களும் விருந்துபசாரங்களுமாக நீடித்தன! இதில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை தமிழக ஆளுநர் திரு கே. கே. ஷா அவர்கள் கொடுத்த விருந்தும் சென்னையில் பிலிப்பைன் நாட்டின் கௌரவப் பிரதிநிதியாக விளங்கும் திரு எம். ஏ. சிதம்பரம் அவர்கள் அளித்த விருந்தும்.

திரு எம். ஏ. சிதம்பரம் அவர்களின் விருந்துபசாரத்தை ஏற்றபோது சதாசிவம் தம்பதியும் ராதாவும் மீண்டும் மணிலாவுக்கே சென்றுவிட்டனர்! ஆம், பிலிப்பைன் நாட்டுப் பிரதிநிதி வாழும் இடம் பிலிப்பைன் நாட்டுப் பிரதேசமாகவும் கருதப்படும்தானே!




**1974**
**தீபாவளி**
**விசேஷ**
**விற்பனை!**

புதிய கலர்கள் **கிருஷ்ணா**

**யமுனா • காவேரி • சரயூ**

பல்வேறு ரகங்களில் கட்டங்கள் & புட்டாக்கள்

பட்டுச் சேலைகள் - சோளி பீஸ்கள்
பாவாடை துண்டுகள் மற்றும்
நூல் சேலைகள் & மில் ஜவுளிகள்

# நல்லி
# சில்க் எம்போரியம்

**பாண்டி பஜார்**

தியாகராய நகர், சென்னை-17

போன்: 442567 • 441155

*தீபாவளி வரை எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு*

எமது தயாரிப்புகள் அனைத்தும் கல்கத்தாவில் கிடைக்குமிடம்:

**ஸ்ரீ கணேஷ்ராம் சில்க் ஸெண்டர்**

(நல்லி சில்க்ஸ் & டெக்ஸ்டைல்களுக்கு ஏஜெண்டுகள்)

2-A, பிபின்பால் ரோட் (தேஷ்பிரியா பார்க் சமீபம்)
போன் : 41-1636 கல்கத்தா–700026

# சிவகாமியின் சபதம்

## இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## அபயப் பிரதானம்

"சிவகாமி! மெய்யாகவே நீதானா? அல்லது என் கண்கள் என்னை ஏமாற்றுகின்றனவா?" என்று நாகநந்தி அடிகள் போலி அவநம்பிக்கையுடன் கேட்டார்.

"அடிகளே! நான்தான்; அநாதைச் சிவகாமிதான். இந்த ஏழைச் சிற்பியின் மகளைக் காப்பாற்றுங்கள், சுவாமி!"

"அப்படிச் சொல்லாதே, அம்மா! நீயா அநாதை? நீயா ஏழை? பல்லவ இராஜ்யத்தின் குமாரச் சக்கரவர்த்தி மாமல்லப் பிரபுவின் காதலுக்குரிய பாக்கியசாலி அல்லவா நீ? மண்டலாதிபதியான மகேந்திர பல்லவரின் மருமகளாகப் போகிறவள் அல்லவா?"

"சுவாமி! என்மேல் பழி தீர்த்துக் கொள்ள இது சமயமல்ல! தங்களை ரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன். காப்பாற்ற வேண்டும்" என்று சிவகாமி அலறினாள்.

"பெண்ணே! காவித் துணி தரித்த ஏழைப் பரதேசி நான்! என்னால் உன்னை எப்படிக் காப்பாற்ற முடியும்?"

"தங்களால் முடியும், சுவாமி! தங்களால் முடியும்! தாங்கள் மனம் வைத்தால் கட்டாயம் காப்பாற்ற முடியும்."

"இவர்களிடம் நீ எப்படிச் சிக்கிக் கொண்டாய்? கோட்டைக்குள்ளிருந்து ஏன் வெளியே வந்தாய்? எப்படி வந்தாய்?"

"அதையெல்லாம் இப்போது கேட்க வேண்டாம், சுவாமி! மூடத்தனத்தினால் வெளியே வந்தேன். என் அருமைத் தந்தைக்கு நானே யமனாக ஆனேன்! நான் எக்கேடாவது கெட்டுப் போகிறேன். என் தந்தையைக் காப்பாற்றுங்கள்."

"உன் தந்தை எங்கே அம்மா? அவருக்கு என்ன ஆபத்து வந்திருக்கிறது?" என்றார் பிக்ஷு.

"ஐயோ! இவர்களைக் கேளுங்கள். அப்பா எங்கே என்று இவர்களைக் கேளுங்கள்! சற்று முன்னால் ஏதோ பயங்கரமான வார்த்தை என் காதில் விழுந்தது. அதோ அந்தக் குதிரையின் மேல் இருப்பவர் சொன்னார். ஆயனர் எங்கே என்று அவரைக் கேளுங்கள், சுவாமி! சீக்கிரம் கேளுங்கள்!"

இப்படிச் சிவகாமி சொல்லிக் கொண்டிருக்கும்போதே சற்றுப் பின்னால் குதிரை மேல் வீற்றிருந்தபடி மேற்கூறிய காட்சியைக் கவனித்துக்கொண்டிருந்த தளபதி சசாங்கன் குதிரையைச் செலுத்திக் கொண்டு அவர்கள் அருகில் வந்து சேர்ந்தான்.

"புத்தம் சரணம் கச்சாமி!" என்று நாகநந்தியைப் பார்த்துப் பரிகாசக் குரலில் கூறி வணங்கினான்.



அமரர் கல்கி

வாதாபிச் சக்கரவர்த்தியிடம் நாக நந்தி பிக்ஷுவுக்கு இருந்த செல்வாக்கைக் குறித்துப் பொறாமை கொண்டவர்களில் தளபதி சசாங்கனும் ஒருவன்.

''புத்தம் சரணம் கச்சாமி!'' என்று நாகநந்தியும் கடுகடுத்த குரலில் கூறினார்.

''ஆ! நாகநந்தி பிக்ஷுவே! திடீரென்று இங்கே எப்படி முளைத்தீர்? நாகம் இத்தனை நாளும் எந்த வளையில் ஒளிந்து கொண்டிருந்தது? இப்போது ஏன் வெளியில் தலையை நீட்டுகிறது?'' என்று தளபதி சசாங்கன் கேட்டான்.

கேட்டவர்கள் நடுங்கும்படியான நாகப் பாம்பின் சீறல் சத்தம் அப்போது திடீரென்று கேட்டது.

அதே சமயத்தில் ''பாம்பு! பாம்பு!'' என்று ஒரு கூக்குரல். அதைக் கேட்டு அங்கே கூடியிருந்த வீரர்கள் சிதறி ஓடினார்கள்.

நாகப் பாம்பு ஒன்று சரசரவென்ற சத்தத்துடன் தளபதி சசாங்கன் ஏறியிருந்த குதிரையின் கால் மீதேறி ஊர்ந்து அப்பாலிருந்த புதருக்குள் விரைந்து சென்று மறைந்தது.

''தளபதி! ஜாக்கிரதை! சாதாரணமாய் நாகப் பாம்பு கடிக்காது. ஆனால் கடித்துவிட்டால் அதன் விஷம் ரொம்பப் பொல்லாதது!'' என்றார் பிக்ஷு.

சசாங்கன் பல்லைக் கடித்துக்கொண்டு, ''பிக்ஷு.... இந்த அருமையான உண்மையைச் சொன்னதற்காக மிகவும் வந்தனம். எனக்கு அலுவல் அதிகம் இருக்கிறது. தங்களுடன் பேசிக்கொண்டிருக்க இப்போது நேரமில்லை. மன்னிக்க வேண்டும். அடே! இந்தப் பெண்ணைப் பிடித்துக் கட்டுங்கள்!'' என்று சற்று விலகிப் போய் நின்ற வீரர்களைப் பார்த்துச் சொன்னான்.

அதைக் கேட்ட வீரர்கள் சிவகாமியை நெருங்கி வந்தார்கள்.

''தளபதி! தென்னாட்டின் புகழ் பெற்ற நடனக் கலைவாணியைச் சிறைப் பிடித்தது உம்முடைய அதிர்ஷ்டம் தான். இந்த விசேஷ சம்பவத்தைச் சக்கரவர்த்தியிடம் நான் கூடிய சீக்கிரம் தெரியப்படுத்துகிறேன்...''

''ஓஹோ! அப்படியானால் பிக்ஷுவும் வாதாபியை நோக்கித்தான் பிரயாணம் கிளம்பி இருப்பது போல் தெரிகிறது.''

''ஆம், சசாங்கரே! ஆனால், சக்கரவர்த்தியிடம் இந்த விசேஷச் செய்தியைத் தெரிவிப்பதற்கு வாதாபி வரையில் நான் போக வேண்டியதில்லை. சற்று முன்னால் இந்தக் காட்டில் இன்னொரு புறத்தில் சக்கரவர்த்தியைப் பார்த்தேன்...''

''பொய்! பொய்! வாதாபிச் சக்கரவர்த்தி இதற்குள் வட பெண்ணை நதியை அடைந்திருப்பார்.''

''பொய்யும் மெய்யும் விரைவிலே தெரியும், தளபதி! ஆனால் ஒரு விஷயத்தை ஞாபகம் வைத்துக் கொள்ளும். புலி தனக்கு இரையாகக் கொள்ள எண்ணிய மானின் மீது பூனை கண்ணைப் போட்டால் விபரீதம் விளையும். ஞாபகம் இருக்கட்டும்!'' என்று நாகநந்தி கம்பீரமான குரலில் கூறியபோது,



தளபதி சசாங்கனின் வாயிலிருந்து, 'உம்! 'உம்' என்ற உறுமல் ஒலியைத் தவிர வேறெதுவும் வரவில்லை.

பின்னர், நாகநந்தி சிவகாமியைப் பார்த்து, ''பெண்ணே! நான் சொல்வதைக் கவனமாகக் கேள். அதன்படி நடந்து கொண்டால் உனக்கு ஓர் அபாயமும் நேராது. இவர்களுடன் தடை சொல்லாமல் போ! நீ நடனக் கலை பயின்றவளாதலால், உன் கால்களில் வேண்டிய பலம் இருக்கும். நடப்பதற்கு நீ அஞ்சமாட்டாய் அல்லவா?'' என்றார்.

இதுவரை சசாங்கனுக்கும் நாகநந்திக்கும் நடந்த சம்பாஷணையைக் கவனித்த வண்ணம் கற்சிலையைப் போல் அசைவற்று நின்ற சிவகாமி சட்டென்று உணர்வு வரப் பெற்றவளாய், ''சுவாமி!



என்னைப் பற்றி எனக்கு ஒரு கவலையும் இல்லை. இந்தப் பாவியினால் தங்கள் சிநேகிதர் ஆயனர் பெரும் அபாயத்துக்கு உள்ளாகி விட்டார். ஐயோ! அவரைக் காப்பாற்றுங்கள்!'' என்று கதறினாள்.

உடனே நாகநந்தி பிக்ஷு, ''தளபதி! இந்தப் பெண்ணின் தந்தை எங்கே?'' என்று கேட்க, சசாங்கன் ஒரு கோரச் சிரிப்புச் சிரித்த வண்ணம், ''ஆஹா! உங்களுக்கு அது தெரிய வேண்டுமா? சொல்கிறேன். பல்லவ நாட்டில் உள்ள சிற்பிகளை யெல்லாம் ஒரு காலையும், ஒரு கையையும் வெட்டிப் போடும்படி சக்கரவர்த்தியின் கட்டளை. இவளுடைய தந்தை பெரிய மகா சிற்பியல்லவா? அதற்காக அவருக்கு மரியாதை செய்யும்பொருட்டு, இரண்டு கையையும், இரண்டு காலையும் வெட்டிப் போடச் சொல்லி யிருக்கிறேன்! அதோ தெரியும் அந்தப் பாறை மேல் கொண்டு போய்ச் சுற்றுப் பக்கமெல்லாம் தெரியும்படியாகக் காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டி விடச் சொல்லியிருக்கிறேன். காஞ்சிக் கோட்டை மதிலிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரிய வேண்டும் என்றுதான் பாறை உச்சிக்குக் கொண்டு போகச் சொன்னேன்'' என்றான். இவ்விதம் சொல்லிவிட்டு மீண்டும் அவன் பயங்கரமாகச் சிரித்தான்.

சசாங்கன் பேசுகிறவரையில் அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த சிவகாமி அவன் பேசி முடித்ததும், விவரிக்க முடியாத பயங்கரமும் வேதனையும் நிறைந்த கண்களினால் நாகநந்தியைப் பார்த்து, ''அடிகளே!'' என்று கதறினாள்.

அப்போது நாகநந்தி, ''பெண்ணே! என் வார்த்தையில் நம்பிக்கை வை!

உன் தந்தையை நான் காப்பாற்றுகிறேன். மன நிம்மதியுடன் நீ இவர்களோடு போ!'', என்றார்.

அப்போது சசாங்கன், ''பிக்ஷு! வாதாபிச் சக்கரவர்த்தியின் கட்டளைக்குக் குறுக்கே நிற்பவர்களுக்கு என்ன தண்டனை தெரியுமல்லவா? அது தங்களுக்கும் ஞாபகம் இருக்கட்டும்!'' என்று கூறிவிட்டு, சிவகாமியைப் பார்த்து, ''பெண்ணே! இந்தப் பிக்ஷு உனக்குச் சொன்ன புத்திமதி நல்ல புத்திமதிதான். அதன் பிரகாரம் தடை ஒன்றும் சொல்லாமல் எங்களுடன் வந்துவிடு!'' என்றான்.

## இருபத்துநாலாம் அத்தியாயம்

# அட்டூழியம்

ஆயனரின் உள்ளம் சிந்தனா சக்தியை அடியோடு இழந்திருந்தது. தன் கண்ணால் பார்த்தது, காதால் கேட்டது ஒன்றையுமே அவரால் நம்ப முடியவில்லை. இவையெல்லாம் கனவிலே நடக்கும் நிகழ்ச்சிகளா, உண்மையில் நடக்கும் சம்பவங்களா என்பதையும் அவரால் நிர்ணயிக்கக் கூடவில்லை.

உலகத்தில் மாநிலத்தை ஆளும் மன்னர்கள் யுத்தம் செய்வது இயற்கைதாம். அதில் நம்ப முடியாதது ஒன்றுமில்லை. அப்படி யுத்தம் செய்யும் அரசர்கள் போருக்கு அனுப்பும் வீரர்களுக்கு, 'ஸ்திரீகளையும், குழந்தைகளையும், வயோதிகர்களையும், பசுக்களையும், கலைஞர்களையும் ஹிம்சிக்கக் கூடாது!' என்று கட்டளையிடுவதுண்டு. அரசர்கள் பொல்லாத மூர்க்கர்களாயும் கருணையற்றவர்களாயுமிருந்தால், அவ்வளவு சிரத்தை எடுத்துக் கட்டளையிட மாட்டார்கள்.

ஆனால், சாம்ராஜ்யம் ஆளும் சக்கரவர்த்தி ஒருவர் தம் படைவீரர்களுக்கு, 'சிற்பிகளின் காலையும் கையையும் வெட்டிப் போட்டுவிடுங்கள்!' என்று ஆக்ஞை இடுவது நடக்கக் கூடிய சம்பவமா? அந்த மாதிரிக் கட்டளையிடக் கூடிய இராட்சதர்கள் இராஜ்ய சிம்மாசனத்தில் ஏறி வீற்றிருக்க முடியுமா? அந்த நாட்டின் பிரஜைகள் அதைப் பொறுத்துக் கொண்டிருப்பார்களா?

அதிலும் புலிகேசிச் சக்கரவர்த்தியா அப்படிப்பட்ட கட்டளை பிறப்பித்திருப்பார்? எவருடைய இராஜ்யத்தில் உலகத்திலேயே இல்லாத கலை அதிசயங்கள் — என்றும் அழியாத வர்ணங்களில் தீட்டப்பட்ட அற்புத ஜீவ சித்திரங்கள் — உள்ளனவோ, அந்த இராஜ்யத்தின் மன்னரா அப்படிப்பட்ட கொடூரமான கட்டளையை இட்டிருப்பார்? அப்படி அவர் கட்டளையிட்டிருப்பதாக அந்தக் குரூர முகம் படைத்த தளபதி கூறியது உண்மையாக இருக்க முடியுமா? அவன் சொன்னதாகத் தம் காதில் விழுந்தது மெய்தானா?

அவனுடைய கொடூர மொழிகளைக் கேட்டுச் சிவகாமி உணர்விழந்து தரையில் விழுந்தது உண்மையா? அவளைத் தாங்கிக்கொள்ளத் தாம் ஓடியபோது வாதாபி வீரர்கள் தங்களுடைய இரும்புக் கரங்களினால் தம்மைப் பிடித்துக் கொண்டதும் உண்மையாக நடந்ததுதானா? பிறகு அந்தப் படைத் தலைவன் இட்ட கட்டளை மெய்தானா? ''அதோ அந்தப் பாறை முனைக்கு அழைத்துப் போய், கோட்டையில் உள்ளவர்களுக்குத் தெரியும்படி காலையும், கையையும் வெட்டிக் கீழே உருட்டி விடுங்கள்!'' என்ற பயங்கர மொழிகள் தாம் உண்மையாகக் கேட்டவைதானா?

அல்லது இவ்வளவும் ஒரு பயங்கரக் கனவில் நடந்த சம்பவங்களா? இந்தப் பாறை மீது தாம் ஏறுவதும், தம் கால்கள் களைத்துத் தள்ளாடுவதும் நிஜமா? அல்லது வெறும் சித்தப் பிரமையா?

இவை யெல்லாம் வெறும் பிரமைதான்; அல்லது கனவுதான். ஒரு நாளும் உண்மையாக இருக்க முடியாது.

ஆனால் அதோ தெரிகிறதே, காஞ்சிக் கோட்டை அதுகூடவா சித்தப் பிரமையில் தோன்றும் காட்சி?

இல்லை, இல்லை; காஞ்சிக் கோட்டை உண்மைதான். தம்மைப் பாறை முனையில் கொண்டு வந்து நிறுத்தியிருப்பதும் உண்மைதான்! இதோ இந்த ராட்சதர்கள் தம் கைகளைப் பிடித்துக் கொண்டிருப்பதும், கைகளை வெட்டுவதற்காகக் கத்தியை ஓங்குவதும் நிச்சயமாக நடக்கும் சம்பவங்கள்தான்.

ஆ! சிவகாமி! என் அருமை மகளே! இந்தப் பாவி உன்னை என்ன கதிக்கு





இன்பதீபாவளி திருநாளில்
இல்லங்களில் புத்தொளியும்
பூரிப்பும் பொங்கிட ✳✳✳

# சாந்தி சில்க்

அளிக்கும்

**புதிய**
டிசைன்கள்!
**புதுமை**
வண்ணங்கள்!!



நெஞ்சை அள்ளும்
**நியூவேவ்**



கண்கவர்
**கவிதா**



இனிமைதரும்
**இண்டிமேட்**



பாவையர் மயங்கும்
**பாபி**



மயிலாப்பூர்

# சாந்தி சில்க்

எம்போரியம்



சென்னையில் புத்தம் புது பட்டு ஜவுளி மாளிகை

6, சன்னதித் தெரு. (கபாலீச்வரம் சன்னதி அருகில்) மைலாப்பூர், சென்னை-4. போன்: 74403. மதுரையில் நியூகாலேஜ் ஹவுஸில் உள்ள எங்களின் தற்காலிக ஷோ-ரூம் தீபாவளி வரை திறந்திருக்கும். ஞாயிறு விற்பனை உண்டு. ரூ. 200க்கு மேல் புடவை வாங்கினால் அழகிய பரிசு உண்டு.



உள்ளாக்கி விட்டேன்! என் அஜந்தா வர்ணப் பைத்தியத்துக்கு உன்னைப் பலி கொடுத்து விட்டேனே! ஐயோ! என் மகனே! மகனே!

வீரர்களில் ஒருவன் கத்தியை ஓங்கிய போது ஆயனர் தம் கண்களை இறுக மூடிக் கொண்டார். ஆனால் ஓங்கிய கத்தி அவர் எதிர்பார்த்தபடி அடுத்த கணம் அவருடைய கையை வெட்டவில்லை. ''நிறுத்து'' என்று அதிகாரக் குரலில் ஓர் ஒலி கேட்டது. ஆயனர் கண்ணைத் திறந்து பார்த்தபோது, ஆஹா! இதென்ன? புலிகேசிச் சக்கரவர்த்தியல்லவா இவர்? இங்கு எப்படி வந்து சேர்ந்தார்?

சக்கரவர்த்தியைப் பார்த்த வியப்பினால் ஆயனரைப் பிடித்துக்கொண்டிருந்த வீரர்கள் திடீரென்று கைப்பிடியை விட்டார்கள். பக்கத்திலிருந்த பள்ளத்தில் ஆயனருடைய கால் நழுவிற்று. கீழே பூமி வரையில் சென்று எட்டிய அந்த மலைச் சரிவில் ஆயனர் உருண்டு உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் தம் உணர்வை இழந்தார்.

ஆயனருக்குச் சுய உணர்வு வந்த போது, அருகில் ஏதோ பெருங் கலவரம் நடப்பதாகத் தோன்றியது. பல மனிதர்களின் கூச்சலும், கற்கள் மோதும் சத்தமும் கலந்து கேட்டன. முன்னம் கேட்ட அதே அதிகாரக் குரலில், ''நிறுத்து'' என்ற கட்டளை எழுந்தது.

ஆயனர் கண்களைத் திறந்து பார்த்தார். அரண்ய மத்தியில் இருந்த தமது பழைய சிற்பக் கிருஹத்துக்குள் தாம் இருப்பதைக் கண்டார். சுற்றும் முற்றும் பார்த்தார். வாதாபிச் சக்கரவர்த்தி கம்பீரமாய் நின்று கையினால், ''வெளியே போங்கள்!'' என்று சமிக்ஞை செய்ய, மூர்க்க வாதாபி வீரர்கள் கும்பலாக வாசற் பக்கம் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தார்.

வீட்டுக்குள்ளே தாம் அரும்பாடுபட்டுச் சமைத்த அற்புதச் சிலைகள் — அழகிய நடன வடிவங்கள் தாறுமாறாய் ஒன்றோடொன்று மோதப்பட்டு அங்கஹீனம் அடைந்து கிடப்பதைக் கண்டார். அப்போது அவருடைய உடம்பின்மேல் யாரோ ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போல் இருந்தது. பழுதடைந்த சிலைகளை அருகில் போய்ப் பார்க்கலாம் என்று எழுந்தார். அவருடைய வலது காலில் ஒரு பயங்கரமான வேதனை உண்டாயிற்று. எழுந்திருக்க முடியவில்லை. தமது வலது கால் எலும்பு முறிந்து போய்விட்டது என்பது அப்பொழுதுதான் ஆயனருக்குத் தெரிந்தது.

அச்சமயம் பின்கட்டிலிருந்து ஆயனருடைய சகோதரி உடல் நடுங்க, கண்களில் நீர் பெருக, ஓடி வந்து ஆயனர் அருகில் விழுந்தாள். பாவம்! சற்று முன்னால் அந்தச் சிற்பக் கிருஹத்தில் வாதாபி வீரர்கள் செய்த அட்டகாசங்களைப் பார்த்து அவள் சொல்ல முடியாத பீதிக்கு ஆளாகியிருந்தாள்.

எல்லா வீரர்களும் வீட்டுக்கு வெளியே போன பிறகு, வாதாபிச் சக்கரவர்த்தி சாந்தமாக நடந்து ஆயனர் கிடந்த இடத்துக்கு அருகில் வந்தார். ஆயனர், ''பிரபு! தங்களுடைய வீரர்கள் இம்மாதிரி அட்டூழியங்களைச் செய்யலாமா?'' என்று கதறினார்.

(தொடரும்)



# வெள்ளிக் கிழமை

ஆர். வைத்தியநாதன்



லீலாவுக்கு வெள்ளிக் கிழமை என்றால் தலை கால் புரியாது. விடியற்காலையில் எழுந்து எண்ணெய் ஸ்நானம் செய்வாள். லக்ஷ்மி பூஜை செய்து விட்டுத்தான் சாப்பிடுவாள். தவறாமல் அதைச் செய்வதனால்தான் பணத் தட்டுப்பாடு இல்லாமல் குடும்பம் நடக்கிறது என்று அவள் நம்பினாள்.

''அம்மா! கூர்க்கா வந்திருக்கிறான்.''

''அவனுக்குக் காலை நேரத்தில் பண வருல் பண்றதுதான் வேலை. நமக்கு அப்படியா? நாளைக்கு வரச் சொல், பிரேமா!''

கோபாலன் சம்பளம் வாங்கியதும் லீலாவிடம் கொடுத்து விடுவான். வீட்டு பட்ஜெட் லீலாவின் பொறுப்பு. பட்டுவாடா செய்வதும் அவள்தான். கோபாலன் தலையிட மாட்டான். கோபாலனிடம் காப்பியைக் கொடுத்த லீலா பேச்சுக்கொடுத்தாள்.

''தீபாவளி நெருங்கிவிட்டதே. வருஷா வருஷம் எனக்குப் பட்டுப் புடவை வாங்கித் தருவீர்களே?''

''போனஸ் பணம் கிடைக்க இன்னும் பத்து நாட்களாகுமே. அது வந்ததும், வாங்கித் தரேன்.''

''இன்னும் நாலைந்து நாட்களிலே புடவை விலை ஏறிடுமாம். அதனாலே இப்போதே வாங்கி விடுவோம்.''

''பணம்?''

''பத்து நாட்களில் தரேன்னு சொன்னால், செட்டியார் ஒத்துக்குவார்.''

''சரி.''

''வெள்ளிக்கிழமை இன்னிக்கி. பட்டுப் புடவை வாங்கினால் விருத்தியாகும்.''

''அதுதான் சரின்னுசொல்லிவிட்டேனே.''

கேட் திறக்கும் சத்தம் கேட்டு, வெளியே வந்து பார்த்தாள். வேலைக்காரி! லீலாவுக்குச் சலிப்பாயிருந்தது. இவளும் பணத்துக்காகத்தான் வந்திருக்க வேண்டும்.

''பணந்தானே? இன்னிக்கு வேறு யாரிடமாவது வாங்கிக் கொள். நான் நாளைக்கு நிச்சயமாகத் தருகிறேன்.''

''மத்தவங்களும் இதையேதாம்மா சொல்றாங்க. மணி அரிசியில்லேம்மா. ரேஷன் வாங்கித் தாம்மா நானும் நாலு குழந்தைகளும் சாப்பிட்டாகணும்.''

''காரணம் இல்லாமல் நான் உன்னை நாளைக்கு வான்னு சொல்லுவேனா? போ! எப்படியாவது சமாளித்துக் கொள்.''

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, முனியம்மா பின் வாங்கினாள்.

ஞானப் பிரகாசம் செட்டியார் இவர்களைக் கண்டதும் குதூகலமாக வரவேற்றார்.

லீலாவின் கண்கள் புடவைகளைப் பார்த்ததும், அகல விரிந்தன ஆச்சரியத்தில். எத்தனை நிறங்கள், பார்டர்கள், கட்டங்கள்! காஞ்சீபுரம், திரிபுவனம், ஆரணி, தர்மாவரம் எல்லாப் புடவைகளுமே போட்டி போட்டுக் கொண்டு கவர்ந்தன. புடவை நிறத்துக்கேற்ற ஜாக்கெட் பீஸ்களும் இருந்தன. ஐந்து புடவைகளையும் அவற்றுக்கு மாட்சாக ஜாக்கெட் பீஸ்களும் எடுத்துக் கொண்டு செட்டியாரிடம் வந்தாள்.

''செட்டியார்! இந்தப் புடவைகளின் விலையைச் சொல்லுங்க. எது எங்க சக்திக்குத் தகுந்ததோ அதை எடுத்துக் கொள்கிறேன்.''

''விலை என்னம்மா பெரிய விலை? புடவை பார்டரிலே விலைச் சீட்டு ஒட்டியிருக்குதே. உங்களுக்காக அந்த விலையிலே பத்து பர்சன்ட் கழிக்கக்கிறேன். எதை வேணுமானாலும் எடுத்துக் கொள்ளுங்க. பத்து வருஷங்களா வாங்கினவங்களாச்சே.''

''செட்டியார்! இதை எடுத்துக்கறேன். ஆனால் பணம் இப்ப இல்லே. பத்து நாள் கழிச்சுத்தான். சரிதானே!''

''அதான் சொல்லிட்டேனுங்களே. பத்து வருஷப் பழக்கமாச்சுங்களே. எடுத்துக்குங்க.''

லீலா, புடவை ஜாக்கெட்டை எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

''ஒரு நிமிஷம்மா! புடவையை நாளைக்கு நான் பையன் மூலமாக உங்கள் வீட்டுக்கு அனுப்பிடறேன்.''

''உங்களுக்கு எதுக்குங்க வீண் தொந்தரவு? வெள்ளிக்கிழமையா இருக்கு. நானே எடுத்துக்கிட்டுப் போறேன்.''

''அதனாலேதாம்மா. நானும் நாளைக்கு அனுப்பறதாச் சொல்றேன். வெள்ளிக்கிழமை மட்டும் பத்து வரவிலே கொடுக்கறதில்லேங்க. பணத்துக்குத்தான் கொடுக்கறது. அதனாலே''

லீலா வாயடைத்துப் போனாள். அவளை அணைத்தவாறு வெளியே வந்த கோபாலன் ''லீலா! வெள்ளிக்கிழமைங்கிறது உனக்கு மட்டும் இல்லே. நம்பிக்கையும் நியாயமும் ஒன்லே டிராஃபிக்கா இருக்கக் கூடாது. வா'' என்றான்.



# தாயுள்ளம்

ஆர்ஜி

சுந்தரம் ஆபீஸிலிருந்து வந்ததும் அவனுடைய மனைவி அவனை எதிர்கொண்டு வரவேற்கவில்லை.

அவனுக்குத் தெரியும், இப்படித்தான் இருக்கும் என்று. உதட்டில் புன்னகையைத் தவழ விட்டபடி கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டான். அவனுடைய கண்கள் வசுவைத் தேடின.

வசு தான் கோபித்துக் கொண்டிருப்பது தெரிய வேண்டுமென்பதற்காகக் கொஞ்சம் கண் மறைவாக இருந்தாள்.

சுந்தரம் நாற்காலியில் வந்து அமர்ந்து கொண்டான். டிபன் காப்பி ஒன்றும் வந்த பாடில்லை.

சுந்தரம் தனக்குள் 'இவளுக்கு என்னோடு வாழ்ந்த இந்தப் பத்து வருஷங்களில் என்றைக்கு என்னிடம் கோபமாக இரண்டு மணி நேரம் இருக்கத் தெரிந்தது?' என்று நினைத்துச் சிரித்துக் கொண்டான்.

''என்ன சிரிப்பு வேண்டியிருக்கிறது?'' என்று கடிந்து கொண்டாள் வசு.

''நீ கோபித்துக் கொண்டு கடுவன் பூனை மாதிரி இருந்தால் நானும் சிரிக்காமல் அப்படித்தான் இருக்க வேண்டும் என்கிறாயா? என்றைக்கு உன்னால் கண்டிப்பும் கறாருமாய் இருக்க முடிந்தது? சற்று நேரம் முகத்தைத் தூக்கிக் கொண்டிருப்பாய். அப்புறம் குழைந்து குழைந்து பேசுவாய்!''

''இப்பொழுது என்ன கண்டிப்பும் கறாரும் குறைவாகப் போயிற்று? என் பேச்சு உங்களிடம் என்றைக்கு எடுபட்டது? கொஞ்சத்தில் மசிந்து வரவில்லை. பேச்சு என்னமோ பிரமாதமாக இருக்கிறது.''

''ஆனால் வசு, நீ கேட்கிற வரம் இருக்கிறது பார், அதற்கு மனச்சாட்சி உள்ள ஒருவனும் இசைந்து வரமாட்டான்.''

''இங்கு மனச்சாட்சி என்பதற்கு அர்த்தமே இல்லை. எனக்குத் தெரியாமல் செய்வதானால்தான் மனச்சாட்சிக்குப் பயப்பட வேண்டும். நானே உங்களை இந்த வம்சம் விருத்தியாக இன்னொரு கல்யாணம் செய்து கொள்ளுங்கள் என்னும்போது நீங்கள் யோசிப்பானேன்? நான்தான் மலட்டுப் பாவியாக நிற்கிறேன், இன்னொருத்தியாவது வந்து இந்த வம்சம் தழைக்கட்டும் என்றால்....''

''அடா அடாஅடா அடாஅடா! வீட்டுக்கு வந்தாலே வரவர இந்த ரோதனை பெரிதாகப் போய்விட்டது.''

''ஆமாம், இப்படிப் பேசியே என் வாயை அடைக்கப் பார்க்க வேண்டாம். நீங்கள் ஒரு முடிவுக்கு வந்தாலொழிய நான் ஓய மாட்டேன்.''

''நான்தான் அன்றே என் முடிவைச் சொல்லிவிட்டேனே. கல்யாணம் என்ன பொம்மை விளையாட்டா? உன் விருப்பப் படிக்குச் செய்து கொள்ள? வேண்டுமானால் அநாதாலயத்திலிருந்து ஒரு குழந்தையை எடுத்து வருவோம். வளர்ப்போம்.''

''சீச்சீ! எவளோ பெற்றுப் போட்ட குழந்தையை நான் வளர்க்கவா? அதெல்லாம் முடியாது. நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும்.''

''வசு! நான் சொல்வது உனக்குக் கொஞ்சம்கூடப் புரியமாட்டேன் என்கிறது. நமக்கு அப்படி ஒன்றும் வயதாகவில்லை. பார்த்துக் கொண்டு தத்து எடுத்துக் கொள்ளுவோம்.''

'' இன்னும் என்ன வயதாகணும்? எனக்குக் கல்யாணம் ஆகிப் பத்து வருஷங்களாகின்றன. தின்னாத மருந்தும் மாத்திரையும் இல்லை. இனிமேல் கிடையாது என்று டாக்டரே சொல்லியாயிற்று.''

இப்படிப் பேசிக் கொண்டிருந்த அவளைச் சுந்தரம் வெறித்து நோக்கினான். திடீரென்று அவனுடைய விழிகள் எப்படியோ இருக்கிறதாக வசு உணர்வதற்கும் அவன் அப்படியே உட்கார்ந்த இடத்திலிருந்து சாய்வதற்கும்



# போட்டிக் கதை.12

சரியாக இருந்தது. ''ஐயோ, என்ன இது?'' என்று வசு அவனை ஓடித் தாங்கினாள்.

சுந்தரம் மெள்ளத் தன்னைச் சமாளித்தபடி எழுந்திருக்க முயன்றான். ''அப்படியே படுத்திருங்கள். உங்களுக்கு என்ன செய்கிறது? இன்றைக்கென்று நான் ஆபீசிலிருந்து வந்ததும் கவனிக்காமல் போனேனே. என்ன உடம்பு உங்களுக்கு? டாக்டரைக் கூப்பிடச் சொல்லட்டுமா?'' என்று கண்களில் நீர் மல்கக் கேட்டாள். சுந்தரம் வேண்டாம் என்று தலையை ஆட்டிவிட்டுத் தண்ணீர் வேண்டும் என்று கைகளால் ஜாடை காட்டினான்.

இரண்டு மிடறு நீர் குடித்ததும் வசு அந்த நீரைக் கொண்டு அவன் முகத்தைத் துடைத்துப் பங்காவைச் சுழலவிட்டாள். ஒருவாறு ஆசுவாசம் அடைந்த அவன் மெதுவாக வசுவைத் தன் பக்கத்தில் அமரச் சொல்லி அவள் கைகளை ஆதரவோடு பற்றிக் கொண்டான்.

''வசு! நான் என்னவோ உன்னிடம் எப்படிச் சொல்லுவது என்று அடக்கி வைத்திருந்தாலும் அந்த நினைப்பின் அழுத்தம் என்னையே திணற அடிக்கிறது. உன்னிடம் சொல்லத்தான் துடிக்கிறேன் வசு. ஆரம்பத்தில் உன்னிடம் சொல்லாமல் மூடிவிட முடியும் என்றுதான் நினைத்திருந்தேன். நீ குழந்தைகள் இல்லை என்று தவிக்கும் ஒவ்வொரு நிமிஷமும் நான்.... நான் ஒரு குழந்தையை நினைத்து ஏங்க ஆரம்பித்தேன். முழுவதும் கேள். நான் இந்த நிமிஷத்தில் உன்னிடம் என் எல்லா அந்தரங்கத்தையும் பகிர்ந்துகொள்வது என்று தீர்மானித்து விட்டேன். உன்னிடம் நான் முதலில் மன்னிப்பு கேட்டு விடுகிறேன் வசு. இதில் நான் குற்றமற்றவனானாலும் உன்னிடம் சொல்லாமல் ஒளித்து ஒருத்தியை மணந்ததற்காக என்னை மன்னித்துவிடு.''

படபடவென்று பேசிய சுந்தரத்துக்குப் பழைய நினைப்பின் அழுத்தம் முகத்தில் செம்மை படரத் திணறலை ஏற்படுத்திற்று. தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்பவனைப் போல் சற்று நிறுத்திக் கொண்டான்.

அதற்குள் வசுவின் மனம் ஆயிரம் எண்ணங்களுக்குத் தாவிவிட்டது. இது நாள் வரையில் குழந்தை இல்லாததற்கு அவனுக்கு மறு மணம் செய்து வைக்கவும் தயாராக இருந்து அவனை நச்சரித்துக் கொண்டிருந்தவள் அவன் தனக்கும் முன்னர் ஒருத்தியோடு உறவு கொண்டிருந்தான், அவளால் அவனுக்கு ஒரு சந்ததியையும் தர முடிந்திருக்கிறது என்று நினைத்தபோது அவளது மனம் ஏமாற்றத்தால் தாக்கப்பட்டுத் துடித்தது.

அந்தக் குழந்தையும் தாயும் எங்கே இருக்கிறார்கள் இப்பொழுது? ஏன் அவனை விட்டுத் தன்னை மணந்தார் என்று பல கேள்விகள் ஏககாலத்தில் எழுந்தும் தன்னை அறியாமலே

அவளிடம் 'அந்தக் குழந்தை ஆணு பெண்ணு' என்று கேட்டாள்.

இத்தனை அதிர்ந்த நிலையிலும் அவளுடைய தாய்மை ஏக்கத்தின் பிரதிபலிப்பை அவள் வாய் முணுமுணுப்பாகக் கேட்ட சுந்தரம் ஒரு கணம் திகைப்படைந்தான்.

''உன் கேள்விக்கு ஒரு கதையே சொல்ல வேண்டியவனுகிறேன் வசு. உன்னை மணப்பதற்குமுன் அலுவலக வேலையாக டில்லியில் ஒரு வருஷம் இருக்கும்படி இருந்தது. அங்கு நான்குடியிருந்த வீட்டுக்காரரின் பெண்ணிடம் என் மனம் லயித்தது. சூழ்நிலையும் எங்களுக்குச் சாதகமாக அமையவே அவள் தாய்மை அடைந்தாள். என் பெற்றோர்களிடம் அவளை மணக்க அனுமதி கிடைக்காமல் தவித்துக் கொண்டிருந்தேன். அவர்களுடன் போராடிக் களைத்து அவளை மணப்பதுதான் என் கடமை என்று உணர்ந்த நான் அதற்கான முயற்சியில் இறங்குவதற்குள் அவள் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றுவிட்டு இந்த உலகத்தைவிட்டே போய்விட்டாள். அவள் இருந்திருந்தால் அவளுக்குத் துரோகம் செய்திருக்க மாட்டேன். அவள் போனபின் என் பெற்றோர்களின் வற்புறுத்தலால் குழந்தையை அநாதை ஆசிரமத்தில் விட்டு விட்டு உன்னை மணந்தேன்.''

வசு மன வேதனையினுல் பதில் ஏதும் சொல்லாமல் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள். அவருடைய குழந்தை எங்கோ அனுதையாக வளர இங்கு குழந்தை இல்லை என்று தான் ஏங்கும்போது அவருடைய மனம் என்ன பாடு பட்டிருக்கும்!

அவனுடைய மன நிலையை உணர விரும்பி நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். இன்னமும் சுந்தரம் கண் மூடிய நிலையிலே இருந்தான்.

அந்தக் களங்கமற்ற முகத்தில் ஒளி குன்றிச் சிந்தனை தேங்கி, வேதனை படர்ந்ததாக ஒரு நாள்கூடப் பார்த்ததில்லையே என்று நினைப்பு ஓடிற்று அவள் மனத்தில்.

ஏன்? ஒரு நாள்கூடத் தன் குழந்தையைப் பற்றி நினைக்காத கல் மனமா? தன் மனம் புண்படும் என்கிற கரிசனமா?

வசுவின் மனம் சிந்தித்துச் சிந்தித்து ஓய்ந்து விட்டது. மனத்தின் தளர்ச்சி உடலில் தெரிய மெள்ளத் தள்ளாடியபடி எழுந்து தன் அறைக்குள் போய்ப் படுத்துக் கொண்டு விட்டாள்.

இருள் சூழ்ந்து கொண்டு வருவதை உணர்ந்து சுந்தரம் எழுந்து விளக்கைப் போட்டான்.

மெள்ள வசுவின் அறைக்குள் நுழைந்து, படுத்திருந்த அவளது தோள்களை ஆதரவாய்ப் பற்றி, ''வசு! என் மேல் கோபமா?'' என்று கேட்டான்.

வசு நன்கு அழுது தன் வேதனையைக் கரைத்திருந்தாள். நன்கு சிந்தித்து விவேகத்தையும் அடைந்திருந்தாள். ''கோபம் கொள்ளாமல் எப்படி இருப்பது? நான் ஒரு குழந்தைக்காக ஏங்கிக் கொண்டிருக்கும் பொழுது நீங்கள் என்னிடம் முன்னமேயே சொல்லாமலிருந்தது தப்புத்தானே? ஏன் நம்முடைய குழந்தை அனுதை இல்லத்தில் வளர வேண்டும்? இன்றே போய் அவனை அழைத்து வாருங்கள்'' என்ருள்.

மறு வாரமே குழந்தையை அழைத்துக் கொண்டு வந்துவிட்டான் சுந்தரம். பையன் மிக நோஞ்சலாக இருந்தாலும் களையாகவும் சிவப்பாகவும் இருந்தான்.

அவனைக் கவிவரதன் என்று பெயரிட்டுக் கூப்பிட்டாள் வசு. பத்து வயதுக்கேற்ற மன, உடல் வளமில்லாத அவனைத் தாய் தந்தையரின் ஆதரவில்லாததினுல் அப்படி இருக்கக் கூடும் என்று எண்ணித் தன் முழு நேரத்தையும் செலவிட்டு அவனை ஆளாக்குவதில் முனைந்தாள்.

அவன் அம்மா என்று கூப்பிடும் போது வசு பூரித்துப் போனுள். அவன் வளர வளர வசுவின் மனத்தில் அவனிடம் அலாதியான பாசம் வளர்ந்தது.

அவனது ஒவ்வொரு செயலையும் பேச்சையும் அவள் ரசிக்கும் தன்மையைக் கண்டு சுந்தரம் வியந்து போனுன், ''ஏன் வசு, உனக்கு இவனிடம் உன் சக்களத்தி மகன் என்ற குறையே கிடையாதா?'' என்று ஒரு நாள் கேட்டான்.

''மூச்! இனி அந்த வார்த்தையைச் சொல்லாதீர்கள். இவன் என்னுடைய மகன். எனக்குச் சக்களத்தி ஒருத்தியைக் கொண்டு வரவும் தயாராகத்தான் இருந்தேன். அது ஒரு தினுசு. உங்கள் வம்சத்தை விருத்தி செய்த மகத்தான செல்வாக்கினுல் அவள் என்னிடமிருந்து உங்கள் அன்பை ஆக்கிரமித்தவளாகவும் இருந்திருப்பாள் அல்லவா? அந்த வேதனை எனக்கு இப்பொழுது இல்லாமலே எனக்குக் கிடைத்தவன் கவிவரதன். அதனுல் என் மனம் நிறைந்திருக்கிறது'' என்ருள் வசு.

வருடங்கள் ஓடி விட்டன. சுந்தரம் தம் வேலையிலிருந்து ஓய்வு பெற்றுவிட்டார். கவிவரதன் படித்து முன்னுக்கு வந்துவிட்டான். வசு தன்னுடைய உறவிலேயே நல்ல பெண்ணுகப் பார்த்து மணம் முடித்து வைத்தாள்.

மகனையும் மருமகளையும் வெளியில் அனுப்பி விட்டு வசுவும் சுந்தரமும் வீட்டிலிருக்கும் போது ஒரு நாள் சுந்தரம் வசுவைக் கூப்பிட்டுத் தம் அருகில் உட்காரச் சொன்னுர்.

சில நாட்களாக அவருடைய உடல் நலம் பாதிக்கப்பட்டு டாக்டர்களுடைய மேற்பார்வையில் இருந்தார். அதிக நடமாட்டம் இல்லாது படுத்த படுக்கையாகிவிட்ட அவருக்குக் கவிவரதனும் வசுவும் பார்த்துப் பார்த்துச் சேவை செய்தார்கள்.

''வசு, குழந்தைகள் எங்கு போயிருக்கிருர்கள்?'' என்று கேட்டார்.

'''பாபி' சினிமா பார்க்க வேண்டும் என்று இருவரும் ஆசைப்பட்டார்கள். போய் விட்டு வரச் சொல்லியிருக்கிறேன்.''

''என்னுடைய உடம்பு நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருக்கிறது வசு.''

''நீங்கள் அதிகம் பேசாதீர்கள். எனக்குப் பயமாக இருக்கிறது. குழந்தைகள்கூட இங்கு இல்லை.''

''பயப்படாதே, வசு. அப்படி இன்றே போய்விடும்படி என் உடல் நிலை இல்லை என்ருலும், என்னுடைய முடிவு நாட்கள் அதிகத் தூரமில்லை என்றுதான் எனக்குப் படுகிறது. அதற்குள் உன்னிடம் ஒரு விஷயம்......

# இந்த தீபாவளிக்கு குமரன்

## புத்தம் புதிய டிசைன் பட்டுப் புடவைகள் வாங்கி மகிழுங்கள்



- பல வண்ணங்கள்-
பலப்பல டிசைன்கள்
- நவநாகரீக நங்கைகள்
தேர்ந்தெடுப்பது **குமரன்**
பட்டுப் புடவைகளே!
- உற்பத்தி விலைக்கே வாங்கிட,
இன்றே விஜயம் செய்வீர்!!

## குமரன் சில்க்ஸ்

(பனகல் பார்க் எதிரில்)
தி. நகர், சென்னை-600017
போன்: 443544

தயாரிப்பு நிலையங்கள்:
காஞ்சீபுரம் & ஆரணி

Sarath-KS



## ஜீவனான ஜோக்!

இந்திய விவசாய மந்திரி ஜகஜீவன்ராம் ஒரு ஜோக் அடித்துக் கூடி இருப்பவர்களை மகிழ்விக்கிறார். படத்தில் அமெரிக்க வெளி விவகார மந்திரி ஹென்றி கிஸ்ஸிஞ்சர், நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம், தொழில் மந்திரி ஸ்ரீ டி. ஏ. பை, வெளிவிவகார மந்திரி சவான் ஆகியோரைக் காணலாம்.



## நம்பிக்கை மூலை

பர்ஸைத் தொலைத்துவிட்டுத் திண்டாடுவோர் பலர். வீடு திரும்பப் பஸ்ஸுக்குக் கொடுக்கக்கூடச் சில்லறை இராது. அவர்களுக்கு உதவுவதற்காகக் கேரள போலீஸ் இலாகா 'நாணய பாங்கி'யைக் கொச்சியில் ஒரு பஸ் நிலையத்தில் நடத்துகிறது! நம்பிக்கையின் அடிப்படையில் நடக்கும் இந்த ஏற்பாட்டின்படி ஓர் அவசரத் தேவைக்குப் பெட்டியிலிருந்து பணம் எடுத்துக் கொள்ளலாம். பின்னால் வசதிப்பட்ட போது தாங்களாகவே திரும்பப் பெட்டியில் போட்டுவிடலாம். இந்த நல்ல காரியத்துக்கு உதவ விரும்புகிறவர்களும் பெட்டியில் பணம் போடலாம்.

குழந்தைகள் வருவதற்கு இன்னும் நேரம் இருக்கிறது அல்லவா?'' என்று முன் எச்சரிக்கை போல் கடிகாரத்தைப் பார்த்தார். ''வசு! நீ ஓர் அதிர்ச்சியான விஷயத்தைத் தாங்கிக் கொள்ள வேண்டும்'' என்றார்.

அவருடைய பீடிகையினால் பீதி அடைந்த வசு அவருடைய கைகளை இறுகப் பற்றிக் கொண்டு, ''என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? குழந்தைகள் இருக்கும் போது பேசுங்கள். இப்போது பேச வேண்டாம்!'' என்றாள்.

''முடியாது வசு. இது அவர்களுக்குத் தெரியக் கூடாது. நீ கொஞ்சம் அமைதியாகக் கேள். வசு.... நாம் இரண்டு பேரும் அந்நியோன்யமாக வாழ்ந்தோம். ஒருவர்க்கொருவர் விட்டுக் கொடுத்து அன்பை வளர்த்துக் கொண்டோம். அப்படிப்பட்ட அன்புக்குச் சோதனையை வளர்த்தார் ஆண்டவன். பிள்ளை இல்லாத குறையைத் தீர்க்க மறுமணம் செய்து கொண்டுதான் ஆக வேண்டும் என்று நீ என்னை வற்புறுத்திப் பிடிவாதம் பிடித்தாய். அடமாகக்கூட மாறிற்று அது. அந்த நிலையில் எனக்கு உன் ஸ்தானத்தில் இன்னொருத்தியை வைத்துப் பார்க்கும் தெம்பு இல்லை. அதனால் உன்னிடம் கவிவரதனை எனக்குப் பிறந்த பிள்ளை என்று நாடகமாடி நம்ப வைத்தேன்.''

வசு திடுக்கிட்டாள். என்ன சொல்லுகிறார் இவர்! ''கவிவரதன் உங்கள்.....!''

''இல்லை, வசு! என் வாழ்க்கையில் என் இதயத்தில் இடம் பிடித்தவள் நீ ஒருத்திதான். வேறொருத்தியை ஏற்கும் மனமின்றிக் கவிவரதன் என் குழந்தை என்று கொண்டு வந்தேன். அனாதைக் குழந்தையை நீ ஏற்கத் தயாராயில்லாததால் பொய் சொன்னேன். வசு கவிவரதனை அதற்காக நீ வித்தியாசமாக நினைக்காதே. நம் ரத்தத்தில் உதித்திருந்தால் கூட இத்தனை உயர்வாக இருந்திருப்பானா என்பது சந்தேகம்தான். கவிவரதன் அத்தனை.......!''

''அது எனக்கு நீங்கள் சொல்லித்தான் தெரியணுமா? ஆனால் அதை ஏன் இன்று, இத்தனை நாட்களுக்குப்பிறகு சொன்னீர்கள்?''

''வசு! எவ்வளவுதான் நீ பிள்ளைப் பாசத்தில் என் மீது நான் சுமத்திக் கொண்ட களங்கத்தை மன்னித்து விட்டாய் என்றாலும் என்னைப் பற்றி உன் உள் மனத்தில் ஒரு குறை இருக்குமே என்கிற எண்ணத்தை என்னால் தாங்க முடியாது தவித்தேன். அந்தக் குறையுடன் சாக விருப்பம் இல்லாமல்தான் அதை இன்று உன்னிடம் ஒப்புக் கொண்டுவிட்டேன். எங்கே வசு, அது உன் உள் மனத்தில் புகைந்து கொண்டிருக்கிறதா இல்லையா?''

''இல்லை. கேட்ட ஒன்றிரண்டு மாதங்களுக்கு அத்தகைய உணர்வு இருந்தது. மற்றொருத்தியை நான் கொண்டு வந்த பிறகு என் மனம் புண்பட்டிருக்குமானால் எவ்வளவுமட்டமாகிவிடுவேன். எனக்கென்று உங்களுடைய வருகைக் கவிவரதன் வந்ததில் நான் பூரண மகிழ்ச்சியடைந்தேன். இப்பொழுதும் அவனிடம் என் அன்பு மாறாது. அவனை நான் என் அன்பையும் பாசத்தையும் கொட்டி வளர்த்திருக்கிறேன். என் பிள்ளைக் கலி தீர்த்த அவனிடம் என் உயிரே இருக்கிறது. சரி குழந்தைகள் வரும் நேரம். இனி நாம் இதைப் பற்றிப் பேசாதிருப்போம்'' என்று சொல்லித் தன் வேலைகளைக் கவனிக்க எழுந்து போனாள் வசு.

சுந்தரம் அவளையே பார்த்துக் கொண்டு வியப்பில் ஆழ்ந்திருந்தார்.

# 'லாக்கர் பேசினால்.....!



**நா**னும் எனது சகாக்களும் பலமாகப் பூட்டப்பட்ட ஓர் அறைக்குள்ளோ, ஒரு கட்டிடத்தின் பாதாள அறைக்குள்ளோ, தெய்வமே என்று நிம்மதியாக இருந்து வந்தோம். சென்ற சில வாரங்களாக எங்கள் பெயர் அகில இந்தியாவிலும் சந்தி சிரிக்கும் அளவுக்குப் பிரசித்தி பெற்று விட்டது.

நான்தான் ஆங்கிலத்தில் Locker என்றும், ஆங்கிலோ தமிழில் லாக்கர் என்றும் அழைக்கப்படுபவன். பாங்குகளில் வசித்து வருபவன். பல லட்சம் பேர் பாங்குகளில்-பணம் போட்டுக் கணக்குகள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் நூற்றுக்கு ஒருவர்தான் என்னைப் பார்த்திருப்பார்கள்.

தங்களது விலை உயர்ந்த ஆபரணங்கள், அதிகப்படியான ஆபரணங்கள், கம்பெனி பங்கு சர்டிபிகேட்கள், இன்ஷியூரன்ஸ் பாலிஸிகள், உயில்கள், தஸ்தாவேஜுக்கள் முதலியவற்றைப் பத்திரமாக வைக்க எங்களை உபயோகப்படுத்துகிறார்கள்.

நான் மாத வாடகைக்கு விடப்படுகிறேன். ஆனால் 'ரெண்ட் கண்ட்ரோல்' சட்டத் தொல்லைக்கு உள்ளாவதில்லை. என்னைப் போன்ற சாதாரண அளவுள்ளதற்கு வாடகை 28 ரூபாய். பாங்கில் கணக்கு வைத்துக் கொண்டிருப்பவர்கள் மட்டுமின்றி, மற்றவர்களும் எங்களை வாடகைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

பெட்டகம் (இப்படித்தான் இந்தியன் பாங்க், சென்னை ஆயிரம் விளக்கு கிளைக் காரியாலய ஏஜெண்ட் திரு அழ. வள்ளியப்பா எனக்குத் தூய தமிழில் பெயர் வைத்தார். அந்தப் பெயரே வழங்கி வருகிறது.) ஆகிய என்னை வாடகைக்கு எடுத்துக் கொள்பவர் என்னுள் பத்திரமாக எதையாவது வைக்கவோ, அல்லது வைத்ததை எடுக்கவோ விரும்புகிறார் என்று வைத்துக்கொள்ளுங்கள். ஏஜெண்ட் அவரை நாங்கள் வசிக்கும் அறைக்கு அழைத்து வந்து இரும்புக் கதவைத் திறந்து விடுவார். வாடகைக்காரர் உடனே கடிகாரத்தைப் பார்க்க வேண்டும். தாம் அறைக்குள்ளே நுழையும் மணி விநாடியை அதற்கென வைக்கப்பட்டிருக்கும் ரிஜிஸ்தரில் குறிப்பிட்டுக் கையெழுத்திட வேண்டும்.

பிறகு ஏஜெண்ட் தம்மிடமுள்ள ஒரு சாவியை என் மீது என் இடதுபுறமுள்ள சாவித் துவாரத்தில் விட்டுத் திறப்பார். பிறகு வாடகைதார் தம்மிடமுள்ள சாவியை வலதுபுறத் துவாரத்தில் விட்டுத் திறப்பார். அப்போது நான் திறக்கப் படுவேன். உடனே ஏஜெண்ட் வெளியில் போய்விடுவார், அறைக் கதவைச் சாத்திக் கொண்டு.

வாடகைதார் தாம் வைக்க வேண்டியதை வைத்து எடுக்க வேண்டியதை எடுத்துக் கொண்ட பின்னர் தமது சாவியால் என்னைப் பூட்டி விடுவார். உடனேயே ஏஜண்டால் திறக்கப்பட்ட பூட்டு தானாகவே பூட்டிக் கொண்டு விடும். என்னைத் திறப்பதற்கு மட்டுமே ஏஜெண்ட் தயவு வேண்டும்.

பலர் நல்ல நாள் பார்த்துத்தான் எங்களுக்குள் சாமான்களைக் கொண்டுவந்து வைப்பார்கள். சிலர் பூஜை மாதிரி செய்து மந்திரங்களை முணுமுணுப்பார்கள். சிலர் விபூதி, குங்குமம், வில்வம், துளசி இது மாதிரி சுவாமி பிரசாதம் சிறிது போடுவதுண்டு. ஒரு கணவனும் மனைவியும் ஒரு தர்மாஸ்பிளாஸ்கில் பால் கொண்டு வந்து அதை அறைக்குள் சாப்பிட்டு விட்டுப் போனார்கள். – பால் காய்ச்சிச் சாப்பிடும் சம்பிரதாயத்தை அனுசரித்து!

சென்ற சில வாரங்களாக ஞாயிற்றுக்கிழமையென்றில்லை; விடுமுறை நாட்கள் என்றில்லை; வருமான வரி உத்தியோகஸ்தர்களும், ரெவின்யூ இண்டெலிஜென்ஸ் உத்தியோகஸ்தர்களும் திடீரென்று பாங்கு ஏஜெண்டுடன் வருகிறார்கள். எங்கள் மீது அரக்கு முத்திரை வைக்கிறார்கள். பிறகு வாடகைதாரரையோ அல்லது அவர் பிரதிநிதியையோ அழைத்து வருகிறார்கள். அவர்கள் முன்னிலையில் அரக்கு முத்திரையை உடைத்து எங்களைச் சாவிகளைக் கொண்டு திறக்கிறார்கள்.

பார்த்தால் எங்களுக்குள் கத்தை கத்தையாகக் கரன்சி நோட்டுக்கள் இருக்கின்றன, தங்கப் பாளங்களும், தங்க 'பிஸ்கட்டு'களும், வைரங்களும், ஆபரணங்களும் இருக்கின்றன. இவையெல்லாம் வருமான வரி கட்டாதவர்களும், கள்ளக் கடத்தல்காரர்களும் வைத்திருப்பவையாம். கிட்டத்தட்ட ஆயிரத்துக்கு மேற்பட்ட லாக்கர்கள் உடைக்கப்பட்டுப் பல கோடி பெறுமானமுள்ள பணமும் சாமான்களும் கைப்பற்றப் பட்டிருக்கின்றன. இன்னும் லாக்கர் சகாக்கள் பலர் சோதனை செய்யப்பட்டு வருகின்றனர். இதை நினைத்தால் எங்களுக்கு வெட்கமாக இருக்கிறது; லாக்கர் குலம் இழிவு படுத்தப்பட்டு விட்டது! — அநாமதேயம்




KAMADHENU







# தாய் பிறந்தாள்

**காந்தன்**

**பா**னுமதி இருக்கிறாரோ, படம் பிழைத்ததோ! படத்தின் குறைகளை யெல்லாம் நிறைவு செய்யும் இயற்கையான நடிப்பு! எல். ஐ. சி. கட்டடத்தின் முன்னால் மற்றக் கட்டடங்கள் கவனத்தைக் கவரா ததுபோல், அவரது நடிப்புக்கு முன்னால் மற்றவர் களின் நடிப்பு எடுபடவில்லை. - சாரதாவைத் தவிர. பானுமதிக்கு ஈடு கொடுத்து நடித்திருக்கிறார் ஊர்வசி சாரதா. கதையில் வரும் அசட்டுத் திருப்பங்களையும் ஏற்றுக்கொள்ள முடியாத கற்பனைகளையும் சாரதா வின் நடிப்பு மறைத்து விடுகின்றது. மகிழ்ச்சி, சோகம், பாசம் ஆகிய உணர்ச்சிகளை அவரால் அநாயாச மாகக் காட்டி நடிக்க முடிகிறதே!

வீட்டோடு இருக்கும் அநாதை சாரதா, அத்தை மகன் முத்துராமனை மானசீகமாகக் காதலித்து அதில் நிறைவைக் கண்டு அவனுக்கு விழுந்து விழுந்து, அன்போடும், பண்போடும், ஓரளவு கண் டிப்போடும் பணிவிடைகள் செய்யும் பாங்கு - பிரமாதம்!

ஏ. சகுந்தலா வழக்கம்போல் வில்லி. ஆனால் நல்லவேளை 'டான்ஸ்' ஆடவில்லை!

முத்துராமனுக்கு இரண்டு பெண்களுக்குத் தாலி கட்டும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. அவர் தாய் சொல்லைத் தட்டாத தனயன். அதற்கு ஏற்ப நடித்திருக்கிறார்.

தேங்காய் சீனிவாசன், சச்சுவை வைத்துக்கொண்டு ஒரு குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை மிகவும் திறமையாகப் பிரசாரம் செய்திருக்கிறார்கள் - நகைச் சுவையாகத்தான்! 'அவுட் ஹவுஸ்' பாட்டி சுந்தரி பாயின் சதித் திட்டங்கள் படத்தின் சுவையான அம்சம்.

இரு தாரங்கள் ஒரே சமயத்தில் வாழ முடியாதே! ஒருத்தி இருந்தாக வேண்டும் என்றால், இன் னொருத்தி இறந்தாக வேண்டுமே! அந்த நியதிப் படி வாழவேண்டிய சாரதாவுக்காக, சகுந்தலாவின் வாழ்வைத் தந்தை மனோகர் துப்பாக்கியின் மூலம் தீர்த்து வைக்கிறார். திரைக் கதையும் அங்கேயே தற்கொலை செய்து கொண்டு விடுகிறது!

பானுமதியின் குரலில் ஒலிக்கும் "மாதுளை முத் துக்கள் மல்லிகை மொட்டுக்கள்" என்ற ஆலங்குடி சோமுவின் பாடல் நெஞ்சைத் தொடுகிறது. ஏ.கே. சுப்பிரமணியத்தின் கதையைப் பொருட்படுத்தவேண் டாம். வசனம், டைரக்ஷனுக்காக அவரைப் பாராட்டலாம்.

'ஒரு குழந்தை பிறக்கும்போதுதான் தாயும் பிறக்கிறாள்' என்பது திரைக்கதையின் தத்துவ மாகக் கூறப்படுகிறது. அடாடா! எப்பேர்ப்பட்ட புதுமைக் கருத்து!

# பட்டு கல்யாணம்



கிராமத்துப் பெண் பட்டுவைக் காதலித்தவன் அரைப் பைத்தியம் துரை; ஆனால் பட்டு காதலித்தது பட்டணத்து வாலிபன் சீனிவாசனை. துரையின் மனத்தை நன்கறிந்த சீனிவாசன் பட்டுவைத் துரைக்குக் கல்யாணம் செய்வித்து அவன் பைத்தி யத்தையும் தெளிய வைக்கிறான். காதலியைக் கரம் பற்றியவன், அவனுக்காக முயற்சி செய்து மணம் முடித்து வைத்தவன் - ஆக இந்நாடகத் துக்கு இரண்டு ஹீரோக்கள். அரைப் பைத்தியம் துரையாக வந்து நாடகம் பார்ப்பவர்களையே தம் நடிப்பினால் பைத்தியமாக அடித்தவர் வி. ராம ரத்தினம்.

பட்டணத்து வாலிபன் சீனிவாசனாக வந்தவர் கே. மோகன். கதாநாயகனுக்கு ஏற்ற தோற்றமும் பேச்சும் அவருக்குப் பாராட்டைப் பெற்றுத் தரு கின்றன.

கே. ஆர். தேவகி மேடை அனுபவம் உள்ளவர். பட்டுவின் பாத்திரம் அவருக்கு நன்கு பொருந்தியது.

கார்த்திகேயன் பண்பட்ட நடிகர். துரையின் தந்தையாக வந்து, கணீரென்று கொட்டகையின் கடைசிவரையில் கேட்கும்படி பேசி நன்றாய் நடித்தார்.

முரளி மனோகர் பாகவதராக வந்து அவ்வப் போது சொந்தக் குரலில் பாடிச் சபையோரை மகிழ் வித்தார்! அவருக்கு ஹாஸ்ய நடிப்பு கைவந்த கலை.

நாடக ஆசிரியர் டி. பி. துரைமணி. அவருக்குத் தனியாக ஒன்று சொல்லிக்கொள்ள ஆசைப்படு கிறேன். வசனம் நன்றாயிருந்தது. ஆனால் மூலக் கதையில் தெளிவில்லை. ஒரு முழுமையான கதையை ஆதாரமாகக் கொண்டு நாடகம் புனையப்படவில்லை யென்றால் நாடகம் 'வெரைட்டி என்டர்டெயின் மெண்ட்' மாதிரி ஆகிவிடும்!

கே. எஸ். நாகராஜனின் டைரக்ஷன் திறமை யினாலும், நடிக, நடிகையர்களின் நடிப்புத் திறமை யினாலும் நாடகம் மொத்தத்தில் நன்றாயிருந்தது.

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 15. முதல் சிறைவாசம்

...இடர் மிகுச் சிறைப்பட்டாலும்...
விதர்தரு கோடி இன்னல் விளைந்தெனை
அழித்திட்டாலும்,
சுதந்திர தேவி, நின்னைத் தொழுதிடல்
மறக்கிலேனே.

—பாரதியார்

**1921**ஆம் ஆண்டின் மத்தியில் ஒத்துழையாமை இயக்கம் வலுப்பெற்று, பெரிய மக்கள் கிளர்ச்சியாக மாறிக் கொண்டிருந்தது. அந்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு, சட்ட மறுப்பு இயக்கம் ஒன்றைத் தொடங்கி அரசாங்கத்தை முடமாக்கி விடுவதென்று காங்கிரஸ் தலைவர்கள் திட்டம் இட்டார்கள். அதற்கு எதிர்வெட்டாக, அப்போது புதிதாய் வைஸ்ராய் பதவி ஏற்றிருந்த லார்டு ரெடிங், விந்தையான — பிறகு விபரீதமாய் மாறிய— திட்டம் ஒன்றை மேற்கொண்டார். இங்கிலாந்திலிருந்து வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்து சுற்றுப் பிரயாணம் செய்ய வேண்டியது. அந்த இளவரசருக்காக நடைபெறும் வரவேற்புக் கோலாகலத்தைக் கண்டு, மக்கள் வியப்புற்றுக் களிப்பார்கள். இந்திய மக்களிடம் இயல்பாயுள்ள ராஜ பக்தி மேலோங்கி, மகாத்மாவின் செல்வாக்கும், தேசபக்தியும் அமுங்கிப் போகும். இப்படி லார்டு ரெடிங் எண்ணி, வேல்ஸ் இளவரசருக்கு அழைப்பு அனுப்பி, அவரை வரவேற்பதற்கான ஏற்பாடுகளைத் தடபுடலாய்ச் செய்யலானார். இதைக் கண்ட தேசியத் தலைவர்கள், இளவரசர் இந்தியாவுக்கு வந்து சேரும் நாளன்று தேசம் முழுவதிலும் ஹர்த்தால் செய்ய வேண்டும் என்றும், பிறகு அவர் செல்லும் ஒவ்வொரு ஊரிலும் அன்றன்றைக்கு அப்படிச் செய்ய வேண்டும் என்றும் தீர்மானித்து, மக்களுக்கு விண்ணப்பம் விடுத்தார்கள்.

நவம்பர் 17ந் தேதி காலையில் வேல்ஸ் இளவரசர் பம்பாயில் உள்ள "இந்தியா வாசல்" மண்டபத்தில் கப்பலிலிருந்து இறங்கினார். அதே சமயம், அந்நகரின் இன்னோர் எல்லையில் ஜன சமுத்திரம் என்று சொல்லத் தக்க மாபெரும் கூட்டம் ஒன்றில், மகாத்மா காந்தி பேசிக் கொண்டிருந்தார். பர்தோலியில் தாம் நடத்தவிருக்கும் சட்ட மறுப்பு இயக்கம் பற்றி அவர் விளக்கம் கூறி, என்ன நேர்ந்தாலும், எவ்வளவு ஆத்திரம் மூண்டாலும் வன்முறைச் செயல்களில் மக்கள் இறங்கக் கூடாது என்றும், அஹிம்சா நெறியை உறுதியாய்ப் பற்றி நிற்க வேண்டும் என்றும் போதித்தார்.

அந்தப் போதனையைக் கேட்ட மக்களில் ஒரு பகுதியினர், அரை மணி நேரத்துக்குள் அதற்கு நேர் மாறாக நடந்து கொண்டார்கள். இளவரசருக்கான வரவேற்பில் கலந்துகொண்டு விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த பார்ஸிகளையும், ஆங்கிலோ இந்தியர்களையும், கிறிஸ்தவர்களையும் அவர்கள் தாக்கினார்கள். 'மகாத்மாவுக்கு ஜே' கோஷம் போட்டுக் கொண்டே தாக்கினார்கள். அன்று தாக்குண்டவர்களின் இனத்தார்கள், மறுநாள் ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் பழிக்குப் பழியாகத் தாக்கினார்கள்.

முதல் நாளிலிருந்தே காந்திஜி, நகரின் பல பகுதிகளுக்கும் விரைந்து கலகத்தை அடக்க முயன்றார். அந்த முயற்சி பலிக்காமல் போகவே, கலகம் நிற்கும்வரை தாம் உணவு கொள்ளப் போவதில்லை என்று அறிவித்தார். அதோடு நில்லாமல், அஹிம்சையை நிலைநாட்டுவதற்காகத் தமது குமாரர் தேவதாஸை, கலகப் பகுதிகளில் பலியாக அனுப்பப் போவதாய் அறிவித்தார்.

மறுநாளே வெவ்வேறு வகுப்புக்களின் தலைவர்கள் கூடி அமைதி ஒப்பந்தம் பேசி முடித்தார்கள். அதைத் தொடர்ந்து அமைதியும் உண்டாயிற்று.





○ "சத்தியாகிரஹி என்ற முறையில் சட்டத்தை மீறிச் சிறை செல்வதற்கு ஸி. ஆர். தமிழ்நாட்டுக்கு வழி காட்டினார்; இந்தியாவுக்கே வழி காட்டினார் என்று சொல்ல வேண்டும்."

○ பெரிய சிறைக்கூடத்தில் திக்கு திசை புரியாது கல்கி திகைத்து நின்ற போது கைலாகு கொடுத்து அழைத்துப் போனார் இளம் கைதி சதாசிவம். அந்தக் கணத்திலிருந்து இருவரும் உயிர்த் தோழர்களானார்கள்.

பம்பாயில் நடந்தது போல் வேறு எங்கும் கலகம் நடக்காமல் பார்த்துக் கொள்வதற்காகத் தேசியத் தொண்டர் படைகளை நெடுகிலும் அமைக்க வேண்டும் என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்தது. அதன்படி ஆங்காங்கே தொண்டர் படைகள் தோன்றலாயின.

அதற்கு எதிர் நடவடிக்கையாக ரெடிங் அரசாங்கம், அந்தத் தொண்டர் படைகள் சட்ட விரோதமானவை என்று அறிவித்தது. அத்துடன், தேசியப் பொதுக்கூட்டங்கள் முதலியவற்றை, ராஜத் துவேஷக் கூட்டங்களாகக் கருதி, அவற்றைப் பலாத்காரத்தால் கலைக்கும்படியும், சம்பந்தப்பட்டவர்களைக் கைது செய்யும்படியும், லார்டு ரெடிங் அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டார்.

அநியாயமான அந்த அடக்குமுறைக்குப் பணியாமல், தலைவர்களும் தொண்டர்களும் அதை மீறலாம் என்று மகாத்மா காந்தி அறிவித்தார். அந்த அறிவிப்பை நாடெங்கும் தேசபக்தர்கள் ஆர்வத்துடன் வரவேற்றார்கள்.

மகாத்மாவின் அறிக்கையின்படி சாத்விகச் சத்தியாக்கிரக முறைப்படி, சட்டத்தை மீறிச் சிறை செல்லும் முதற் பெருமை இராஜகோபாலாச்சாரியாருக்குக் கிடைத்தது. அவரும், பின்னாளில் சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கிய இராமசாமி நாயக்கரும், ஆரணி சுப்பிரமணிய சாஸ்திரியாரும், காங்கிரஸ் பிரசாரத்துக்காக வேலூர் சென்ற போது, அவர்கள் பொதுக்கூட்டம் எதிலும் பேசக் கூடாது என்று தடை உத்தரவு போடப்பட்டது. அந்த உத்தரவை மீறப்போவதாக ராஜாஜி முன்கூட்டியே அறிவித்துவிட்டு, குறிப்பிட்ட தேதியிலும், இடத்திலும், நேரத்திலும் பேசத் தொடங்கினார். அப்படி அவர் தடையை மீறியதற்காக மூன்று மாதச் சிறை தண்டனை அடைந்தார்.

○ கல்கியின் முதல் நாவலை வெளியிட்ட வ. ரா. பின்னால் கல்கியால் 'முதல் எழுத்தாளர்' என வர்ணிக்கப்பட்டார்.

○ நாமக்கல் கவிஞரின் அக்ராசனத்தின் கீழ் நடந்த பொதுக்கூட்டத்தில் பேசியதன் பலனாகத்தான் ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை அடையும் பாக்கியம் பெற்றார் கல்கி. அது அவரது முதல் சிறை வாசம்.

"ஓ! ஸெடிஷன் என்பதற்கு மிக நன்றாக அர்த்தம் தெரியும் ஐயா! சென்ற ஒரு வருஷ காலமாக அந்தக் காரியத்தைத் தானே செய்து கொண்டிருக்கிறேன்!"







''நாட்டுக்கு ஒரு புதல்வர்'' என்ற நூலில் இதுபற்றிக் கல்கி குறிப்பிட்டு, ''சத்தியாக்கிரஹ என்ற முறையில் சட்டத்தை மீறிச் சிறை செல்வதற்கு வி. ஆர். தமிழ்நாட்டுக்கு வழி காட்டினார்; இந்தியாவுக்கே வழி காட்டினார் என்று சொல்ல வேண்டும்'' என்பதாக எழுதியிருக்கிறார்.

சாத்விகமாய்த் தடை உத்தரவுகளை மீறிச் சிறை புகுவது என்பது தேச பக்தியை எடுத்துக் காட்டும் பெருமைச் செயலாகக் கருதப்பட்டது. அடுத்தடுத்து தேசம் முழுவதிலும் தலைவர்களும் தொண்டர்களும் பெருமையுடன் சிறை புகுந்தார்கள். தொண்டர் கிருஷ்ணமூர்த்தியும் அவ்விதப் பெருமைக்காகக் காத்திருந்து கரூரில், கைதாகி அதை அடைந்தார். அதுவும் தேசியக் கவிஞர் ஒருவரின் தலைமையில் பேசிக்கொண்டிருக்கையில் அடைந்தார்.

முதன் முதலாக 1922 ஆம் ஆண்டில் கரூரில் நாமக்கல் கவிஞரை நான் சந்தித்தேன். அந்த வருஷம் ஜனவரி மாதத்தில் அவருடைய அக்ராசனத்தின் கீழ் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசியதன் பலனாகத்தான் நான் ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை அனுபவிக்க நேர்ந்தது.

(பாரதி பிறந்தார்'' நூலில் ''சாபம் நீங்கிய கவிஞர்'' என்ற கட்டுரை)

கைதான வேளையில் கல்கி என்ன பேசினார் என்பது தெரியவில்லை. ஆனால், அவருடைய பேச்சு பொதுவாக எப்படி இருக்கும் என்பதை நாமக்கல் ராமலிங்கம் பிள்ளையே சொல்லி யிருக்கிறார்:

அந்தச் சிறு பிராயத்திலேயே அவர் வெகு அழகாகக் கதைகள் சொல்லி மகாஜனங்களை மயங்க வைப்பார். நானும் கூட மயங்குவேன். அந்தக் கதைகளில், ''ஒரே ஒரு வரம் வாங்கின செட்டியார்'' கதையும் ஒன்று. அந்தக் கதையை நான் இன்றளவும் என் பிரசங்கங்களில் சொல்லி வருகிறேன். அதைச் சொல்லும்போதெல்லாம் நான் ரா. கிருஷ்ணமூர்த்தி என்ற இளைஞரை நினைத்துக்கொள்வது வழக்கம்...

அப்போதும்கூட இப்போது பேசுவதைப் போல்தான் நிதானமாகப் பேசுவார். இப்போது அவர் எழுத்தில் நாம் காண்கிற 'புதிர்' போடுகிற முறையில்தான் அப்போது அவருடைய பிரசங்கமும் ஆரம்பமாகும். அவருடைய பிரசங்கம், கேட்கிறவர்களுக்கு முதலில் திகைப்பையும் இறுதியில் வியப்பையும் உண்டாக்கும். அது அவருடைய தனி வழி.

(வெள்ளி மணி 25-7-47)

கரூரில் கைதானதையடுத்து நிகழ்ந்தவற்றைக் கல்கியே தொடர்ந்து சொல்லட்டும்:

அப்போதுதான் (கரூருக்குப்) புதிதாக வந்திருந்த ஐ. சி. எஸ். ஸப்-கலெக்டருக்கு, முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட் அதிகாரம் இன்னும் வந்திருக்கவில்லை. இதற்காக என்னை முசிறிக்குக் கொண்டு போனார்கள். ஆனால் முசிறியில் வழக்கை எடுக்காமல் போலீஸார் தள்ளிப் போட்டுக் கொண்டே இருந்தார்கள். முசிறி டிபுடி கலெக்டரின் முன்னால் என்னைக் கொண்டுபோய் நிறுத்தியபோது, ''இந்தப் பிள்ளையாண்டான்தானா பிரிட்டிஷ் ராஜ்யத்தைக் கவிழ்த்துவிடப் போகிறான் என்று பிடித்துக் கொண்டு வந்தீர்கள்?'' என்று அவர் போலீஸாரைக் கேட்டார். இதனால் பயந்துதானோ என்னமோ போலீஸார் தவணை கேட்டுக்கொண்டே வந்தார்கள். இவ்விதம் 34 நாள் முசிறி ஸப் ஜெயிலில் வைத்திருந்த பிறகு, கரூருக்கு மறுபடியும் அழைத்துப் போய் அங்கே 7 நாட்கள் வைத்திருந்து, அதற்குள் முதல் வகுப்பு அதிகாரம் பெற்றிருந்த ஸப் கலெக்டர் முன் விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள்....

108வது பிரிவின் பிரகாரம் ஜாமீன் வழக்கு. அதாவது ஒரு வருஷத்துக்கு ராஜாங்கத் துவேஷப் பிரசாரம் செய்வதில்லை என்பதாக என்னை ஜாமீன் கேட்டார்கள். வழக்கை விசாரித்த மாஜிஸ்திரேட் வெள்ளைக்கார ஐ. சி. எஸ். துரை. அவர் உன்னத ஆசனத்தில் வீற்றிருந்தார். நான் கைதிக் கூண்டில் நின்றேன். கோர்ட்டில் எனக்குத் தெரிந்தவர்களோ, பந்துக்களோ, சிநேகிதர்களோ யாரும் இல்லை. அதற்கு முன் நான் கோர்ட்டே பார்த்ததில்லை. போலீஸைப் பூச்சாண்டியாக நினைத்திருந்த காலம்.

ஐ. சி. எஸ். துரை பால்ய வயதினர்; அவரைவிட எனக்கு வயது குறைவு. அவர் பிராஸிக்யூடிங் இன்ஸ்பெக்டரைப் பார்த்து, ''குற்றவாளிக்கு 'ஸெடிஷன்' என்றால் என்னவென்று தெரியுமா எனக் கேளுங்கள்'' என்றார். ''ஓ, நன்றாய்த் தெரியும் ஐயா! சென்ற ஒரு வருஷ காலமாக அந்தக் காரியம்தானே செய்து கொண்டிருந்தேன்'' என்றேன். நிஜத்தைச் சொன்னதன் பலன்: ஒரு வருஷம் கடுங்காவல்.

(''மூன்று மாதம் கடுங்காவல்'' புத்தகம்)

இந்தத் தண்டனை அனுபவத்தைத் தமது சிறுகதை ஒன்றில் எப்படி கல்கி சொல்லியிருக்கிறார் என்று பார்ப்போம். ''நம்பர் 888'' என்ற தலைப்பைக் கொண்ட அந்தக் கதை, முதலில் ''நவசக்தி'' பத்திரிகையில் வெளியாகி, பின்னர் ''சாரதையின் தந்திரம்'' கதைக் கோவையில் இடம் பெற்றது:

முத்தலை நகரின் மத்திய சிறைச்சாலையில் ஒன்பதாவது பிளாக்கில் பன்னிரண்டாவது

சோர்வா?
பலவீனமா?



சாப்பிடுங்கள்

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் — விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுப்பொருட்களும் அடங்கிய பரிபூரண டானிக்

சில டானிக்குகளில் விட்டமின்கள் மட்டுமே உள்ளன. சிலவற்றில் தாதுச் சத்துக்களோ அல்லது இரும்புச் சத்தோதான் உள்ளன. வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் பரிபூரணமானது. அதில் விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுச்சத்துக்களும் சம-சீராக இணைந்துள்ளன—

**தினமும் உற்சாகமும், சக்தியும், வலிமையும் கொடுக்கிறது.**




விட்டமின்கள் நிரம்பியது

## வாட்டர்பரீஸ்
# விட்டமின் டானிக்

சுருசுருப்பான ஆரோக்கியத்திற்கு பரிபூரணமான டானிக்

Grant 9 TM

SRH/OSR

அறையில் இருந்த நம்பர் 888ஐப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டதுண்டா? இல்லை என்றால் நான் சொல்லுகிறேன் கேளுங்கள். ''உமக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்பீர்களோ? சரி, அந்த விவரத்தை முதலில் கூறுகிறேன். மேற்படி சிறைச்சாலையில் அதே பிளாக்கில் பதினோராவது அறையில் நான் சில காலம் வாசம் செய்ய நேரிட்டது.. ஐயையோ! இப்போது இதற்குக் காரணம் உங்களுக்குச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் இந்தக் கதையை இங்கேயே விட்டுவிட்டுப் போய்விடுவீர்கள். என்னைச் சிறைக்கு அனுப்பியது யாதெனில், ஒரு கேள்விக்கு உண்மையாகப் பதில் சொன்னதுதான்...

கேள்வி கேட்டவர் ஒரு வெள்ளைக்காரத் துரை. அவர் உன்னத ஆசனத்தில் அமர்ந்திருந்தார். நானோ கைதியின் கூண்டில் நின்றேன். என்னைவிட வயதில் அவர் இரண்டொரு வருஷமே பெரியவராய் இருப்பார். இந்நிலைமையில் எனக்கு ரோஷமாய் இராதா? ஆம்! பாரத நாட்டின் கௌரவத்தைக் காக்கும் பொறுப்பு முழுவதும் அப்போது என் தலைமீது சார்ந்திருந்ததாக என் எண்ணம்.

''ஸெடிஷன் (அரசாங்கத் துவேஷம்) என்பதற்கு உமக்குப் பொருள் தெரியுமா?'' என்று துரை கேட்டார். ''ஓ, நன்றாகத் தெரியும் துரையே! சென்ற ஒரு வருஷ காலமாக அந்த வேலையில்தான் ஈடுபட்டிருந்தேன்'' என்றேன். நுணலும் தன் வாயால் கெடும்! ''தெரியாது'' என்று பதில் சொல்லியிருந்தால் ஒருகால், துரை, ''பாவம், ஒன்றும் தெரியாத சிறுவன்'' என்று எண்ணி என்னை விட்டிருக்கலாம். உண்மை கூறியதன் பயன், ''ஒரு வருஷ கடுங்காவல்''. என்மீது குற்றம் இல்லை ஐயா! எல்லாம் காலத்தின் கூற்று... என் ஜாதகத்தில் காராக்கிரகப் பிரவேசம் என்று நன்றாய்ப் போட்டிருப்பதாக, வெளியே வந்த பிறகு சோதிடர்கள் சொன்னார்கள்!

முசிரி ஸப்–ஜெயிலில் ஒரு மாதத்துக்கு மேல் அடைபட்டு இருந்தார் அல்லவா? இருபத்து மூன்று வயது இளைஞரான அவருடைய வாசமும் மனநிலையும் அங்கே எப்படி இருந்திருக்கும்?

(அந்த ஜெயிலின்) தாழ்வாரத்தின் வழியாக என்னை முதன் முதலில் கொண்டுபோனபோது, அங்கிருந்த அறைகளுக்குள் எட்டிப் பார்த்தேன். ஒவ்வொரு அறையிலும் இரண்டு மூன்று குறவர்கள் அடைக்கப்பட்டிருந்தார்கள். இந்த மாதிரி ஆட்களுடன் நம்மையும் சேர்த்து அடைத்து விடுவார்களோ என்று கதிகலங்கிற்று. நல்லவேளையாக என்னைத் தனி அறையில் அடைத்தார்கள்....

(குறவர்களுடன் தாம் அடைபடாமல் தப்பிய கல்கி, ''கள்வனின் காதலி,'' நாவலில், கதாநாயகன் முத்தையனைத் திருப்பரங்கோவில் போலீஸ் சிறையில் ஒரு குறவனுடன் அடைபடச்செய்தார். ஆனால் அப்படிச் செய்ததனால்தான் அந்தக் குறவனின் உதவியுடன் முத்தையனைத் தப்பி ஓடச் செய்ய முடிந்தது. அதைத் தொடர்ந்து, முத்தையன் கள்வனாய் மாறும்படியும், அதன் காரணமாய் ஒரு புதிய திசையில் கதை ஓடும்படியும் செய்ய முடிந்தது.)

......அடைத்துப் பூட்டிவிட்டுப் போனார்கள். அறையின் மூலையில் ஒரு சட்டி வைக்கப்பட்டிருந்தது. மற்றப்படி அறை காலியாய் இருந்தது. தாரின் வாசனை, 'லோஷன்', மூட்டைப் பூச்சி வாசனை, மண்ணெண்ணெய் வாசனை — இவ்வளவும் கலந்த ஓர் அருமையான வாசனை நாலா புறங்களிலிருந்தும் வந்து கொண்டிருந்தது. பக்கத்து அறையில் இருந்த குறவர்கள் தங்கள் அபூர்வ பாஷையில் ஏதோ பேசிக் கொண்டிருந்த சப்தம் இலேசாகக் காதில் விழுந்தது. தூரத்தில் ஒரு லாந்தர், கரியடைந்த லாந்தர், முணுக் முணுக்கென்று எரிந்து கொண்டிருந்தது. அடிக்கடி பாராச் சேவகர்கள் வெளி வராந்தாவில் வந்து உலாவி விட்டுப் போனார்கள். மணிக்கு மணி, மணி அடிக்கும் சப்தம் கேட்டது. பாரா மாறுதலுக்காகப் புதிய சேவகர்கள், ''ஹூ இஸ் தேர்?'' என்று கத்தியது, வார்த்தைகள் தெளிவாய்த் தெரியாமல், ஏதோ ஒரு பயங்கர ஊளைச் சப்தம் மாதிரி மட்டும் கேட்டது. தூக்கம் வரவில்லை என்று சொல்ல வேண்டியதில்லை. சிறிது கண்ணை மூடப் பிரயத்தனம் செய்தால், உடனே மேற்படி ஊளைச் சப்தம் கேட்டுத் திடீரென்று தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்திருப்பேன். சில சமயம் இந்தச் சப்தத்துடன் எங்கேயோ தூரத்தில் நிஜ நரி ஊளையிடும் சப்தமும் கலந்து கொள்ளும். உடம்



மூன்றும் வகுப்புக் குழந்தைகள் கலைக் கண் காட்சிக்குச் சென்றனர். பதினெட்டாம் நூற்றுண்டு பிரெஞ்சுக் கலைகள் இடம் பெற்றிருந்தன. "இந்த அறையில் உங்களைக் கவர்ந்த விஷயம் எது?" என்று உபாத்தியாயர் கேட்டார். ஒரு சிறுமி: "டெலிவிஷன் இல்லாதது!"

இந்த நிலைமை இங்கும் விரைவில் ஏற்படலா மல்லவா? —பி. என்

---

பெல்லாம் ஒரு நிமிஷம் நடுங்கும். சற்று நேரம் நிதானித்து, முசிரி ஸப் ஜெயிலில் நாம் விசாரணைக் கைதியாய் இருப்பது உண்மை தான் என்று நிச்சயம் பெறுவேன். "நானே நினைத்தாலும் ஒரு கையெழுத்துப் போட்டு விட்டு விடுதலையாகிப் போய்விடலாம் அல்லவா? நாமாகாத் தானே வந்திருக்கிறோம்? பின் எதற்காக இந்தப் பயம்?" என்று பல்லைக் கடித்துக் கொண்டு மனத்தைத் திடப்படுத்திக் கொள்வேன்....

அந்தப் பத்து அடி அறையில் சுற்றிச் சுற்றி நடந்து கொண்டே இருப்பேன்; கால் வலி எடுத்த பிறகு கூட நடப்பேன். கடைசி யில் தலை சுற்ற ஆரம்பிக்கும்; அப்போது உட்காருவேன். உட்கார்ந்து பதினைந்து நிமிஷங்களுக்கெல்லாம் மறுபடியும் எழுந் திருந்து நடக்கத் தோன்றும்.

அப்போது முசிரி சப் மாஜிஸ்ட்ரேட்டாய் இருந்தவர் ரொம்ப நல்ல மனிதர். அவர் அடிக்கடி வந்து என்னைப் பார்த்துக் கொண் டிருந்தார். ஒரு நாள் "ஏதாவது புத்தகம் இருந்தால் கொடுங்கள்" என்றேன். 'ஆகா!' என்று சொல்லிவிட்டுப் போய் அருமையாக ஒரே ஒரு புத்தகம் கொடுத் தனுப்பினார். அது "பொக்கிஷத் தீவு" என்னும் இங்கிலீஷ் நாவல். *(The Treasure Island by R.L. Stevenson)* இந்த நாவலை நான் மொத்தம் ஒன்பது தடவை படித்தேன். புத்தகம் அவ்வளவு நன்றாக இருந்தது என்பதற்காக அல்ல; பொழுது போவதற் காகத் திரும்பத் திரும்பப் படித்தேன்.

("மூன்று மாதம் கடுங்காவல்")

விசாரணை முடிந்து, தண்டனை விதிக் கிறவரைதான் கைதிகளை ஸப் ஜெயி லில் வைத்திருப்பார்கள். தண்டனை கொடுபட்டதும் மாவட்டச் சிறைக்கோ மத்திய சிறைக்கோ அனுப்பி விடு வார்கள். இந்த வழக்கத்தின்படி கிருஷ்ணமூர்த்தியைத் திருச்சி சிறைக்கு மாற்றல் செய்தார்கள். அந்தச் சிறை யில் நேர்ந்த அனுபவங்கள்:

புதிதாகச் சிறைக்கு வரும் கைதிகளை உடனே உள்ளே அனுப்புவது வழக்கம் இல்லை. வெளியில் 'குவாரண்டை'யில் பத்து நாட்கள் வைத்திருந்து தொற்று வியாதி ஒன்றும் இல்லையா என்று பார்த்துக் கொண்டு, பிறகு தான் உள்ளே அனுப்புவார்கள்.... குவாரண்டையில் வரிசையாக அறைகள் கட்டப்பட்டிருந்தன. தனித் தனி அறையில் போட்டுப் பூட்டுவார்கள். சாப்பாட்டுச் சமயத்தில் மட்டும் வெளியே விடுவார்கள். இவ்வளவு பந்தோபஸ்து இருந்தும் கைதிகள் தப்பி ஓடிப் போகாமலிருக்கும் பொருட்டு, இரண்டு கால்களிலும் இரண்டு இரும்புக் காப்புகளை மாட்டி, அவைகளில் இரண்டு இரும்புச் சங்கிலிகளையும் மாட்டிவிடுவார்கள். இம்மாதிரியான காப்புச் சங்கிலியுடன், குவா ரண்டையிலிருந்து சுமார் ஒரு பர்லாங் தூரத் தில் உள்ள சிறைவாசலுக்கு வந்து, காலையில் கஞ்சியும், மத்தியானம், சாயங்காலம் சாப் பாடும் வாங்கிக்கொண்டு போக வேண்டும்...

நாலு நாள் கழித்து... என்னுடைய தாயா ரும் சித்தியும் என்னை 'இண்டர்வியூ' பார்க்க வந்திருந்தார்கள். நான் குவாரண்டையில் இருக்கும்போதே அவர்கள் வந்துவிட்டபடி யால், சிறை வாசலிலேயே இண்டர்வியூ நடந்தது. கால்களில் காப்பும் சங்கிலியும் குலுங்க, குறுக்குக் கோடு போட்ட குட்டைக் கைச் சட்டையும், முழங்காலுக்கு மேல் அதே துணியில் நிஜாரும் தரித்து அழகான கோலத் தில் வந்த போது, அவர்களுக்கு முதலில் என்னை அடையாளமே தெரியவில்லை. கிட்ட வந்து, "அம்மா, சித்தி! என்னத்திற்காக இவ்வளவு அவசரப்பட்டுக் கொண்டு வந் தீர்கள்?" என்று நான் கேட்ட போதுதான் அவர்களுக்கு என்னைத் தெரிந்தது. அம்மா ஒன்றுமே பேசத் தெரியாமல் திகைத்துப் போய் என்னைப் பார்த்தபடி நின்றாள். சித்தி, "ஐயையோ! உன்னை இந்தக் கோலத்தில் பார்க்கத்தானா உன் அம்மா பெற்று வளர்த் தாள்?" என்று அழத் தொடங்கிவிட்டாள். நான் அவர்களைக் கொஞ்சம் சமாதானப் படுத்தி, "அம்மா, நான் நகை போட்டுக் கொள்வதில்லை என்று நீ குறைப்பட்டாய் அல்லவா? இதோ பார், காப்பும் சங்கிலி யும்!" என்றேன். இந்த நகைச்சுவையை அவர்களால் அனுபவிக்க முடியவில்லை. அதை யும் சோக ரசமாகவே எண்ணி வருத்தப் படத் தொடங்கிவிட்டார்கள்.

(மூன்று மாதம் கடுங்காவல்)

குவாரண்டைன் நாட்கள் முடிந்ததும் கிருஷ்ணமூர்த்தியின் விலங்குகளைக் காவ லர்கள் அகற்றி, அவரை உட்சிறைக்குள் அனுமதித்தார்கள். அந்தப் பெரிய சிறைக் கூடத்தில் அவர் திக்குத் திசை தெரியாமல் திகைத்து நின்றபோது களை யான முகத்துடன் இளம் கைதி ஒருவர் அவரை அணுகி, கைலாகு கொடுத்து,

''நீங்கள்தானே கிருஷ்ணமூர்த்தி, கரூரிலிருந்து வந்தவர்?'' என்று கேட்டு அரசியல் கைதிகளுக்கான பகுதிக்குக் கூட்டிச் சென்றார். அந்த இளைஞர் சதாசிவமும் கிருஷ்ணமூர்த்தியும் அந்தக் கணத்திலிருந்து உயிர்த் தோழர்களானார்கள். பின்னாளில் இணைந்து தேசசேவை செய்தார்கள். மீண்டும் ஒரே சிறைச்சாலையில் வசித்தார்கள்; ஒரே அலுவலகத்தில் வேலை பார்த்தார்கள்; பின்னர் ஒரே நிறுவனத்தில் பங்காளியானார்கள்.

உயிர்த் தோழர் ஒருவரைத் திருச்சி சிறையில் கண்டதை யடுத்து, உயிர்த் தொழிலுக்கான அறிகுறியைச் சில வாரங்களுக்குப் பிறகு, கடலூர்ச் சிறைக்கு மாற்றலானபோது கிருஷ்ணமூர்த்தி கண்டார். அந்தச் சிறையில் கடுங்காவலுக்கு உண்டான வேலைகளைச் செய்தது போக எஞ்சிய நேரத்தில் குறுநாவல் ஒன்றை அவர் எழுதினார். ''விமலா'' என்பது அதன் பெயர்.

அந்த நாவலைப் பின்னர் ''சுதந்திரன்'' என்ற தமது பத்திரிகையில் வ. ரா. வெளியிட்டார். அப்படி வெளியிட்டு, கல்கியின் முதல் இலக்கியப் படைப்பைப் பிரசுரித்த பெருமைக்கும் அவருடைய நிலையான நன்றிக்கும் உரியவரானார்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்குப்பிறகு வ. ரா. மணி மலரில் கல்கி எழுதினார்:

மேற்படி கதையை வ.ரா.விடம் கொடுத்து அபிப்பிராயம் கேட்க விரும்பினேன். என்னுடைய விருப்பம் நிறைவேற ஸ்ரீ ரா. நா. உதவி செய்தார். வ.ரா.விடம் கையெழுத்துப் பிரதியைக் கொடுத்தார். ஸ்ரீ வ.ரா. அடுத்த தடவை திருச்சி வந்தபோது என்னைப் பிடித்துக் கொண்டார். கதையின் அழகைப் பற்றி அவர் போட்ட போடு என்னைத் தூக்கி வாரி உற்சாகக் கடலில் போட்டுவிட்டது. வாயினால் பாராட்டுவதோடு நின்றிருந்தால், ஏதோ என் மனத்தைப் புண்படுத்தக் கூடாது என்பதற்காக அவ்விதம் சொல்லியிருக்கலாம் என்று அதை மறந்து விட்டிருப்பேன். ஆனால், ''சுதந்திரன்'' பத்திரிகையில் அதைத் தொடர் கதையாய் வெளியிடுவதாய்ச் சொல்லி, அவ்விதமே வெளியிடவும் செய்தார். ஸ்ரீ வ. ரா. அவர்கள் அப்போது எனக்கு அளித்த உற்சாகம் என்னை எழுத்துத் துறையில் ஊக்கியதற்கு ஒரு முக்கிய காரணமாகும்.

எவ்வளவோ தேடியும் கல்கியின் அந்த முதல் நாவலின் ஒரு பகுதிகூட அகப்படவில்லை. ஆனாலும், அந்த நாவல் எத்தன்மையது என்பது தெரிகிறது. ''ஒத்துழையாமை செய்து, கலாசாலையை விட்ட இளைஞன் ஒருவனைக் கதாநாயகனாய்க் கொண்ட கதை'' என்று கல்கியே, அதே மலரில் வர்ணித்திருக்கிறார்.

அதாவது ஒரு சுய வரலாற்று நாவல்!

(தொடரும்)




பதினொரு பேர் தங்கத்தோடு சைக்கிளில் பகிரங்கமாகப் பவனி வருகிறார்கள்! அவர்களை எந்தச் சுங்க அதிகாரியும் தடுத்து அவர்களிடமிருந்த தங்கத்தைப் பறிக்க ஓடவில்லை! சீக்கிய ரெஜிமெண்டல் செண்டர் ராணுவக் குழுவினர் சிக்னல் குழுவினிடமிருந்து தங்கக் கோப்பையை முதல் தடவையாகப் பறித்துக் கொண்டனர், தங்கள் அபார ஆட்டத்துக்கு வெற்றிப் பரிசாக! ஐந்தாவது முருகப்பா தங்கக் கோப்பைப் பந்தயத்தில் முன்னாள் ஒலிம்பிக் ஆட்டக்காரர் ஹர்சரன்லால் ஒரு சைக்கிளில் ஆரோகணித்துச் செல்ல, மற்ற சீக்கிய ரெஜிமெண்டல் ராணுவக் குழுவினர் ஆளுக்கொரு சைக்கிளில் வந்து, தங்கக் கோப்பையுடன் எழும்பூர் ஸ்டேடியத்தில் வெற்றிப் பவனி வந்தார்கள். பிறகு தங்கக் கோப்பையைத் தலைக்கு மேலே வைத்துக்கொண்டு பஞ்சாபிப் பாடலைப் பாடிக் குதித்து நடனம் ஆடினார்கள்.

முருகப்பா விளையாட்டுக் கழகத்தினர் இவ்வாண்டு பெண்களுக்கான ஹாக்கிப் போட்டியை முதல் தடவையாக நடத்தினர்! கேரளப் பெண்களும் புதுதில்லிப் பெண்களும் அருணாசலம் கோப்பையைப் பெறப் பெரு முயற்சி செய்தனர்! கேரளக் குழுவின் 'கவி'யும், கேரள ஆட்டக்காரி ரமணியின் 'ஒன்னாங் கிளாஸா'விட்ட 'கோலு'ம் அருணாசலம் கோப்பையைப் பெற்றுத் தந்தன. ரமணியைத் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு மற்றக் கேரளப் பெண்கள் பவனி வந்தது ரசிகர்களைக் கைகொட்ட வைத்தது.

-குண்டுமணி



# திகைக்க வைத்த தீபாவளி!

## குழந்தையைக் காணோம்!

அந்த விற்பனை நிலையத்தில் ஒரு பக்கம் கதர் ஜவுளி வியாபாரம். மறுபக்கம் வீடுகளுக்குத் தினசரி தேவைப்படும் வெண்ணெய், அப்பளம், வடம், ஜாம், ஊதுபத்தி முதலியன விற்பனை.

விடிந்தால் தீபாவளி. கடையிலும் நல்ல கூட்டம். தெருவிலும் நல்ல கூட்டம்.

வெண்ணெய் வாங்கவந்த ஒருவருடன் வந்த நாலு வயதுப் பையன், தெருவில் கொம்பு வாணம், பட்டாஸ் வெடிப்பதை வேடிக்கை பார்க்க நழுவிவிட்டான்.

தந்தை வீடு திரும்ப முற்பட்ட போது, ''ராமு! ராமு!'' என்று கூப்பிட்டபடி தேடினார். கடைக்குள் பையன் தென்படவில்லை.

கடை நிர்வாகியிடம், ''ஸார்! என் பிள்ளையைக் காணோம்!...'' எனச் சொன்ன போது அவர் குரல் நடுங்கியது.

நிர்வாகி கடையின் உள்புறம் போய்ப் பார்த்துவிட்டு, கையை விரித்துக் கொண்டு வந்தார். தந்தை பாசத்தால் தடுமாறி நின்றார்.



''குழந்தையைக் கூட்ட நேரத்திலே அழைச்சிண்டு வரலாமா?'' என்றெல்லாம் தெருவில் போவோர் வருவோர் உபதேசம் பண்ணினார்கள். கடை நிர்வாகிக்கு வேலை ஓடவில்லை. வியாபாரம் போனாலும் போகட்டும் என்று 'காஷ்' கவுண்டரைப் பூட்டிக் கொண்டு எழுந்தவர், தந்தையுடன் சேர்ந்து தேட முற்பட்டார். இருபது நிமிடங்களாகியும் பலனில்லை.

''சார்! உங்க பையன் உங்க வீட்டுக்கே போயிருப்பானோ....? எதுக்கும் நான் சைக்கிள் தாரேன். போயிட்டு வாங்க....'' என்றார் நிர்வாகி.

அந்த யோசனையை ஏற்றுச் சென்றவர் ஏமாற்றத்துடன் திரும்பி வந்தபோது—அவர் பையன் கடைக்கு வந்து சேர்ந்திருந்தான்!

தெருவில் பட்டாஸ் விடுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டே போனவன் பிறகு வழி தெரியாமல் அழுதபடி நின்று கொண்டிருந்திருக்கிறான். யாரோ ஒருவர் கருணைகொண்டு பையன் சொன்ன அடையாளம், வாங்க வந்தது, பண்டம் பற்றிக் கூறியது ஆகியவற்றை வைத்துக் கொண்டு இந்தக் கடையாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்து அழைத்து வந்திருக்கிறார்!

''பையனைக் காணோம் என்றதும் வீட்டில் எல்லோரும் அழ ஆரம்பித்துவிட்டார்கள்'' என்று கூறிய தகப்பனார் கோபத்துடன்,



''எங்கேடா கழுதை போயிருந்தாய்?'' என்று கேட்டு அடிக்கக் கையை ஓங்கினார். அவரை எல்லோருமாகச் சேர்ந்து சமாதானப்படுத்தினார்கள்! அது மட்டுமா? பையனுக்கு ஒருவர் சாத்துக்குடியும், மத்தாப்புப் பெட்டியும் கொடுத்துக் குஷிப்படுத்தினார்.

''தீபாவளிக்கு உறவினர்கள் வேறு வந்திருந்தார்கள். பகல் சாப்பாட்டுக்குப் பதினைந்து நிமிஷம் வீட்டுக்குப் போய் வரலாம் என்றிருந்தேன். குழந்தையைத் தேடப் போய், ரொம்ப கால விரயம் ஆகிவிட்டதால் மீண்டும் 'காஷ்' கவுண்டரில் உட்கார்ந்துவிட்டேன்....'' என்றார் திரு ஏ. சீனிவாசன். அவர்தான் கடை நிர்வாகி.

இச்சம்பவம் சீர்காழியில் உள்ள தஞ்சாவூர் சர்வோதய சங்க விற்பனை நிலையத்தில் நடந்தது.

## யாருக்கு வேண்டும் இந்த வேட்டி !

விடியற்காலம் நான்கு மணி. கங்கா ஸ்நானம் செய்து, புத்தாடைகளை அணிந்து கொண்டிருக்கும் நேரம். வீதிகளில் மத்தாப்பு வாணங்களின் ஒளிக்கோலம். மயிலை வடக்கு மாட வீதியிலுள்ள சம்பூர்ண சாஸ்திரியார் ஜவுளி நிறுவனத்தின் உரிமையாளரின் இல்லம். வீட்டில் உள்ளோர் புத்தாடை அணிந்து பண்டிகை கொண்டாடும் சமயம்.

ஒருவர் வேகமாக வந்து, "சார்! சார்!" என்று குரல் கொடுத்தார்.

" என்ன வேண்டும் ?"

"நீங்க மனசு வைச்சால்தான் என் வீட்டில் தலை தீபாவளியைக் கொண்டாட முடியும்!"

"எனக்கு இரவு பன்னிரண்டு மணி வரை கண் விழித்த அலுப்பு.... அசதியாக இருக்கு. என்னால் என்னகணும்? சீக்கிரம் சொல்லுங்கள் !"

"தலை தீபாவளிக்கு வந்திருக்கும் மாப்பிள்ளை, என்னைப் தேய்த்துக் கொள்ள மாட்டாராம்..... முதல் ரயிலில் ஊருக்குத் திரும்புவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார். அவர் கோபம் தணியணும்னால் நீங்க உடனே உங்கள் கடையைத் திறக்கணும்....."

"என்ன சார் இது?.... இந்த நேரத்தில்!"

"ப்ளீஸ்! மாப்பிள்ளைக்கு வாங்கின வேஷ்டியில் கண்ணுக்கே தெரியாத ஜரிகைக் கரையாம். 'வேஷ்டியை உங்க அப்பாவையே கட்டிக்கச் சொல்லு' என்று மாப்பிள்ளை பேசி விட்டார். அதனால்தான் வந்திருக்கிறேன்..."

வந்தவர் வாடிக்கையாக ஜவுளி எடுப்பவர் இல்லை. இருந்தாலும், மாப்பிள்ளையின் கோபத்தைத் தணிக்க வந்து நிற்கும் நபர், இரக்கத்துக்கு உரியவராக இருந்தார். மேற்கொண்டு யோசிக்கவில்லை. உடனே வீட்டின் வாயிற்புறம் இருந்த கடையைத் திறந்து வேட்டி திணுசுகளை எடுத்துப் போட்டார். "இதை எடுத்துக் கொள்ளுங்கள்... நல்ல அகலக் கரை. கட்டிக் கொண்டால் எடுப்பாக இருக்கும் !" புதியஜரிகை வேஷ்டி, அங்கவஸ்திரத்துடன் ஒரு முறைக்குப் பத்து முறை 'நன்றி'யைக் கூறிக் கொண்டே சென்றார் அந்த நபர்.

கூறியவர்: **திரு ஏ. எஸ். வேங்கடராமன்**

## 'பர்சை'த் தொலைத்தார் !

தியாகராயநகரில் வசிக்கும் ஒரு வசதியான குடும்பத்தில், தலைதீபாவளி.





"மாப்பிள்ளை சாயந்திரம் புதுப் படம் பார்க்கப் போகணுமாம்." பெண் சமாசாரத்தை அம்மாவிடம் சொல்லிவிட்டு மாடிக்குப் போய்விட்டாள். "ரிசர்வேஷன் ஏற்பாடு பண்ணுங்கோ..." என்று அவள் தாயார் கணவரிடம் கூறினாள்.

பெண்ணைப் பெற்றவர் வடபழனி கமலா தியேட்டருக்கு ஃபோன் செய்து 'நந்தா ஒயில் முத்து' படம் ஆரம்பமாவதை அறிந்தார்.

தந்தை தொலைபேசியில் விசாரித்துக் கொண்டிருந்ததை வீட்டிலுள்ள சின்னப் பெண்கள் இருவரும் பையன்கள் இருவரும் கேட்டுக் கொண்டிருந்தனர். "அப்பா! நாங்களும் படம் பார்க்கணும்!" என்றனர்.

"சரி, சரி !" என்று குடும்பத் தலைவர் 'பாக்ஸ்' முதல் வகுப்புக்கு ஏழு டிக்கெட்களை வாங்கி விட்டார்.

மனைவியும் தானும் மட்டும் படம் பார்க்க டிக்கட் வாங்குவார் மாமனார் என எதிர் பார்த்த மாப்பிள்ளைக்குப் பெரிய ஏமாற்றமாய் இருந்தது இது. "உனக்கும் எனக்கும் மட்டும் பாக்ஸ் வாங்கி, மற்றவர்களுக்கு அடுத்த கிளாஸ் எடுத்திருக்கக் கூடாதா ?" என்று கோபத்துடன் மனைவியிடம் முணுமுணுத்தபடியே படம் பார்த்தார்.

இடைவேளைக்கு மேல் திடீரென்று மாப்பிள்ளை, "தலைவலி. வீட்டுக்குப் போகலாம்" என்று புது மனைவியுடன் கிளம்பிவிட்டார்.

மைத்துனன், மைத்துனிகள் தொடர்ந்து படம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மாமனார் புரிந்து கொண்டு பேசாதிருந்துவிட்டார்.

டாக்ஸியில் வீடு திரும்பிய மாப்பிள்ளை திடுக்கிட்டார். "ஐயோ, பர்ஸைக் காணுமே!" என்று டாக்ஸி மீட்டருக்குப் பணம் கொடுக்கும் கட்டத்தில் கையை உதறினார்.

"வரும்போது பர்ஸ் எடுத்து வந்தீர்களா ?" என்று மனைவி கேட்க, "எடுத்து வந்தேன். பர்ஸில் நானூறு ரூபாய் சொச்சம் இருக்கும் ...." என மாப்பிள்ளை பதறினார்.

"சரி, தியேட்டரில் கைதவறி விட்டு வந்திருக்கலாம்... வாருங்கள் தேடிப் பார்க்கலாம் ..." என்று கூறி, மனைவி கணவனை அழைத்துக் கொண்டு மறுபடியும் தியேட்டருக்கே வந்து சேர்ந்தாள்.

அவர்கள் பாக்ஸுக்குள் நுழைந்ததும், "அத்திம்பேர் ! உங்கள் பர்சை நாற்காலியில் விட்டு விட்டீர்களே ! நான் எடுத்து வச்சிருக்கேன்....." என மைத்துனி கொடுத்தாள்.

தியேட்டர் மானேஜர் கூறியது.

தொகுப்பு: ஏ. சுவாமிநாதன்




மண்ணாசை

**யு**வர் ஆனர்.

"இதுவரை நான் நீதிமன்றம் ஏறி அறியேன். எந்தக் குற்றவாளிக்கும் 'தான் குற்றவாளி இல்லை' என்று எதிர் வழக்காட உரிமை உண்டு என்ற காரணத்தால், பேச அனுமதி கோருகிறேன்.

வழக்கின் முதற் கட்டத்து எதிர் மனுவை—அதாவது கவுண்டரை நானே பிரயாசைப் பட்டுத் தயாரித்திருப்பதால், ஒரு முறை கோர்ட்டாரின் அனுமதியுடன் படித்துவிடுகிறேன். எனது எதிர்க்கட்சிக்காரர்களின் மனுவில் கூறியுள்ள புகார்கள் அனைத்துக்கும் அது பதிலாக அமைகிறது என்பதனால், அதையொட்டிக் கோர்ட்டார் பிறப்பிக்கும் எந்த உத்தரவுக்கும் நான் கட்டுப்படத் தயாராயிருக்கிறேன். எனது இக் கோரிக்கையை ஏற்றதற்கு அடையாளமாகக் கோர்ட்டார் அவர்கள் சிரம் அசைத்துச் சம்மதம் தெரிவிப்பார்கள் என்று நம்புகிறேன்.

நான் பொன்னியை மணந்தது மண்ணாசையினால் என்பதை ஒப்புக் கொள்கிறேன். இந்த மண்ணாசை எனக்கு ஏற்பட்டதா, என் பெற்றோருக்கு ஏற்பட்டதா, அல்லது எனக்குப் பெண் கொடுத்தார்களே அவர்களுடையதா என்பதுதான் பிரச்னை.

வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த எனக்குத் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் பெண் கேட்டு வந்தார்கள்.

பெண்ணின் ஜாதகமும் பொருந்திப் பெண்ணும் பிடித்துவிடவே, இருதரப்பாருக்கு மிடையே வரதட்சிணைபற்றிய பேச்சு வந்தது.

அன்றுடம் மாறி வரும் நிலச் சட்டத்தைக் கொண்டும், கையில் பணம் புரளவில்லை என்பதனாலும் பெண்ணைப் பெற்றவர்கள் வரதட்சணைக்குப் பதில், கருணாவும், பொன்னியும், ஐ. ஆர். எட்டும் அமோகமாக விளையும் தஞ்சை மாவட்டத்தில் அயனான நிலமாக எழுதி வைப்பதாகச் சொன்னார்கள். 'சோழ நாடு சோறுடைத்து' — இந்தக் கேள்வி ஞானத்தில் என் தந்தை நிலமாகப் பெறச் சம்மதித்து விட்டார். மண்ணாசை யாரை விட்டது? எனக்கு மாமனாராக வரப் போகிறவர் (இப்பொழுது மாமனாராகிவிட்டவர்) ஒன்பது மாநிலம் அதாவது மூன்று ஏக்கர் எழுதி வைக்கச் சம்மதிக்கவே, எங்கள் திருமணம் ஜாம் ஜாமென்று நடந்தேறியது.

அந்த ஆண்டு மாருவின்பொழுது ஒரு விஷயம் தெரிய வந்தது, எனக்கு எழுதி வைத்திருக்கும் நிலத்தைச் சாகுபடி செய்து வரும் குடியானவனுக்கும், என் மாமனாருக்கும் அந்த நிலம் பற்றித் தகராறு ஏற்பட்டுக் கோர்ட்டு வரையில் போயிருக்கிறது என்று!

எட்டு வருஷமாக அவன் குத்தகை நெல்லை அளக்க வில்லையாம். மாமனார் சாகுபடி உரிமையைப் பறிக்க வழக்குத் தொடுத்திருக்கிறார். குடியானவனோ நியாய வாரம் கோரி மனுக் கொடுத்திருக்கிறான். அநுமார் வால் நீண்டது நிசமோ, பொய்யோ; வழக்கு நீண்டது! இருதரப்புக்கும் நல்ல செலவு. இவர் தட்டியில் புகுந்தால், அவன் கோலத்தில் புகுந்திருக்கிறான். இவர் 'ஈரங்கி'க்குப் போக முடியாத நாளாகப் பார்த்து, பார்க்க வேண்டிய இடத்தைப் பார்த்து, கொடுக்க வேண்டிய இடத்தில் கொடுத்து, 'எக்ஸ்பார்ட்டி'



தீர்ப்புப் பெற்றிருக்கிறான். குத்தகை என்ன தெரியுமா? மாவுக்கு இரண்டரைக் கலம். வரி வாய்தா கட்ட வேண்டியது மிராசுதார் பொறுப்பு. இதில் அவருக்கு என்ன கிடைக்கும்? எனவே, அந்த நிலத்தை விற்று விட முயன்றிருக்கிறார். குடியானவன் அதற்கு இடம் கொடுக்கவில்லை, விற்றால், தனக்கு இத்தனை வீதம் உண்டு என்று கூறியிருக்கிறான். இத்தனை வில்லங்கங்கள் உள்ள நிலத்தை யார் வாங்குவார்கள்? அதனால் என் மாமனார் ஒரு காரியம் செய்திருக்கிறார்; ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடித்திருக்கிறார். பெண்ணைக் கட்டுபவன் தலையிலேயே அந்த நிலத்தையும் கட்டியிருக்கிறார். இவ்விஷயம் அம்பலமானபொழுது, என் தகப்பனுக்கும் மாமனாருக்கும் பேச்சுத் தடித்திருக்கிறது. 'நிலம்தான் கொடுக்கலாம், வியாஜ்யமும் ஆட முடியுமா?' என்று கேட்டு அவர் தண்ணீர் தெளித்துவிடவே, அப்பாவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்திருக்கிறது! 'வரும்படி இல்லாத நிலத்துக்கு வரியும் கட்டுவதா?' என்று குமைந்த அப்பா கடைசி அஸ்திரத்தைப் பிரயோகித்துவிட்டார். எங்களை ஏமாற்றிப் பெண் கொடுத்த இடத்துப் பெண்ணை எங்கள் வீட்டில் வாழ விடுகிறேமா, பார்' என்று! நான் அப்பாப் பிள்ளை; அவர் கட்டுதிட்டத்துக்கு அடங்கியவன். செய்யும் வகையறியாது திகைக்கிறேன்.

**பெண்ணாசை**

யுவர் ஆனர்,

வழக்கின் அடுத்த கட்டம், பெண் இருக்கப் பெண்ணாக நான் இன்னொருத்தியை மணந்து விட்டேன் என்பதாகும். இந்த வழக்கைத் தொடுத்திருப்பவர் அந்தப் பெண் அல்ல; அந்தப் பெண்ணின் சகோதரர்கள் என்று சொல்லிக் கொள்ளும் சுயநலமிகள். நடந்த கதையை — இல்லை உண்மை நிகழ்ச்சியை — இந்த டேப் ரிகார்டர் விவரிக்கும். அருள் கூர்ந்து இதனை இயக்க அனுமதி தாருங்கள். இதன் அடிப்படையில் நானும் வாய்மொழியாகச் சாட்சி கூறத் தயாராய் உள்ளேன்.

“சார்! சார்!”

''எதிரும் புதிருமான வீட்டில் நீங்களும் நானும் எத்தனை நாட்களாக இருக்கிறோம்? ஜன்னலைத் திறந்து வைத்துக் கொண்டு நீங்களும் பார்க்கிறீர்கள், நானும் பார்க்கிறேன். உங்கள் மனம் இளகவே இல்லையே சார்!''

''எப்படி அம்மா இளகும்? ஒருவன் அழகைப் பார்க்கிறான் என்பதற்காக நீ அப்படி ஓர் அர்த்தம் கற்பித்துக் கொள்ளக் கூடாது. உன்னைத்தான் எந்த நேரம் பார்த்தாலும் மூன்று தடியன்கள் சுற்றிக் கொண்டிருக்கிறான்களே!''

''அவங்க என் அண்ணன்மார்கள், சார்!''

''அப்படியா?''

''ஏன், சார்! ஒரு பெண் நல்லபடியாக ஒருவனை மணந்து வாழ நினைப்பது தவறு?''

''இல்லே!''

''நான் உங்களை மணக்க விரும்புகிறேன், சார்!''

''என்னைப்பா?.... எனக்கு... எனக்கு...''

''தயங்காதீர்கள், சார்! நான் நிச மாகவே உங்களிடம் மனத்தைப் பறிகொடுத்திருக்கிறேன்! நீங்கள் மனசு வைத்தால் என்னை எனக்கு இருக்கும் அண்ணன்மார்களிடமிருந்து காப்பாற்ற முடியும்!''

''அவர்கள் அப்படி என்ன செய்கிறார்கள்?''

''அதை நான் எப்படி சார், என் வாயாலே சொல்றது? நானோ தாய்—தந்தை இல்லாத பெண்; அவங்களோ கறிதலை! காலம் போற போக்கிலே, பணத்துக்குத்தான் இந்த உலகிலே மதிப்பு அதிகமாகி விட்டிருக்கு! அந்தப் பணத்தைச் சம்பாதிக்க என்னைக் கருவியாகப் பயன்படுத்திக்கப் பார்க்கிறாங்க, சார்!''

''என்ன? தவறான பாதையிலே போகத் தூண்டுகிறார்களா?''

''தூண்டுகிறார்கள். ஆனால் தவறான பாதையிலே செல்ல விடாமல் தடுத்தும்விடுகிறார்கள்!''

''எப்படி?''

''அதை எப்படிச் சொல்றதுங்க? பசை யுள்ள பிள்ளைங்களா பார்த்து என்னைப் பழக விடுறாங்க; அப்புறம் அவங்களைப் பயமுறுத்திப் பணம் பண்ணுகிறாங்க. படித்தும் வேலை கிடைக்காத குற்றம்!''

'''ஷூர்மார்க்கெட் ரிகார்'டைத் திருப்பிப் போடுறாங்களா?''

''அப்படித்தான் வைச்சுக்குங்களேன். என்னை இந்தப் பிழைப்பிலிருந்து தப்புவிக்க ஒரே வழி; பேசாமல் வாங்க. ரிஜிஸ்தர் ஆபீசுக்குப் போவோம். பதிய வைக்கப்போம். காதும் காதும் வைச்சாப்பலே கல்யாணத்தை முடிச்சுக்குவோம். உங்க புண்ணியத்திலே நான் பெரிய தர்மசங்கடத்திலிருந்து தப்பிச்சுடுவேன்!''

''இதிலே சூது—வாது ஏதும் இல்லையே! உன்னை நம்பலாமா?''

''ஆண்டவன் மீது ஆணை சார்!''

## பொன்னகை

யுவர் ஆனர்,

ஒரு பெண்ணைப் பயங்கரமான ஆபத்திலிருந்து காக்கச் செய்து கொண்டது என் இரண்டாவது திருமணம்.

வழக்கின் மூன்றுவதும் முடிவானதுமான கட்டத்தில் நான் திருடன் என்று குற்றம் சாட்டப்பட்டு நிற்கிறேன். வக்கீல் வைத்து வாதாட விருப்பம் இல்லையாதலால், இவ் வழக்குக்கு வாதியைச் சில கேள்விகள் நானே நேரிடையாகக் கேட்க விரும்புகிறேன்.''

''எஸ் புரொஸீட்!''

''பெண்ணின் தந்தை அவர்களே! உங்கள் பெண் கல்யாணியின் கரம் பற்றிய கணவன் நான். என்னைத் திருடன் என்று குற்றம் சாட்டிக் குற்றவாளிக் கூண்டில் ஏற்றிவிட்டீர்களே! நான் செய்த குற்றம் என்ன, சொல்ல முடியுமா?''

''பெண் இருக்கப் பெண்ணுக என் பெண்ணை மணந்தது குற்றம்தானே?''

''அந்தக் குற்றத்தை நான் மறுக்கவில்லை. பார்க்கப் போனால் நான் அதற்குப் பொறுப்பாளியும் அல்ல. பிள்ளைப் பாசத்தில் பொய் சொல்லி என் தந்தை எனக்கு மறுமணம் செய்து வைத்தார். பெண்ணைப் பெற்றவர்களுடைய கடமை, தீர ஆராய்ந்து பெண்ணைக் கொடுக்க வேண்டியது! அது போகட்டும். இப்போது பிரச்னை அதுவல்ல. நீங்கள் சாட்டிய குற்றமும் அதுவல்ல. உண்மைக் குற்றச்சாட்டுக்கு வாருங்கள்!''

''நாங்கள் பெண்ணுக்குப் போட்டிருந்த நகைநட்டுக்களைத் திருடிச் சென்றீர்கள்!''

''என்னைப் பார்த்துச் சொல்லுங்கள்! உங்கள் பெண் அருகில்தான் இருக்கிறாள். நான் திருடிக் கொண்டு போனேனு? அல்லது உங்களிடம் நேருக்கு நேர் சொல்லி எடுத்துச் சென்றேனு?''

''நாங்கள் பார்த்துவிட்டோம். மூடி மறைக்க முடியாமல் போகவே, சொல்லிச் சமாளித்தீர்கள்!''

''இப்படித் திரித்துப் பேசுவதை நான் விரும்பவில்லை! உங்கள் பெண்ணுக்கு, அதாவது என் மனைவிக்குக் கல்யாணத்தின் பொழுது எண்ணுயிரம் ரூபாய்க்கு நகை போட்டீர்கள், உபயாநுபிரகாரம் சம்மதித்து! இல்லையா? அதற்கு என் அப்பா சாட்சி!''

''..........''

''அடுத்தவனுக்கு இப்பொழுது திருமணம் நிச்சயம் செய்திருக்கிறீர்கள், மூத்த பெண்ணுக்குக் குறையாமல் நகை செய்து போடுவதாகச் சொல்லி! — உண்மைதானே?''

''உண்மைதான்!''

''அவ்வளவு நகை செய்து போட இப்பொழுது உங்களால் பணம் புரட்ட முடியவில்லை. ஒரு திட்டம் தீட்டி வேலை செய்தீர்கள். வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பும் கல்யாணிக்குப் புது நகைகள் செய்து தருவதாகக் கூறி அவளிடமிருந்து நகைகளைப் பெற்றீர்கள். மெய்தானே?''

''..........''

''நான் வந்து கல்யாணியைக் கடிந்து கொண்ட பொழுது, அவள் நகைகளைத் திருப்பித் தந்துவிடுவதாகக் கூறினீர்கள். கொடுக்கவும் கொடுத்தீர்கள்! அப்படித்தானே?''

''ஆமாம்.''

''அவளது உண்மை நகைகளை எடுத்து ஒளித்து வைத்துக் கொண்டு, அதேபோலக் கட்டை கொடுத்த காப்பு—வளையல்களும், கவரிங் நகைகளும் வாங்கிக் கல்யாணியைத் திருப்தி செய்ய முயன்றீர்கள்! உங்கள் வண்டவாளம் தெரியவே, உங்களிடம் சண்டை போட்டுத்தான் நான் உண்மை நகைகளை எடுத்துச் சென்றேன் என்கிறேன். உங்களால் மறுக்க முடியுமானுல் மறுங்கள்! — உங்கள் பெண் உங்களுக்கு ஆதரவாகச் சாட்சி சொல்ல மாட்டாள். இது நிச்சயம்!''

''..........''

''நீட்ஸ் ஆல், யுவர் ஆனர்! இன்றைக்கு விலைவாசி ஏறியிருக்கிற நிலையிலே கெட்டிக்காரன் கல்யாணமே செய்து கொள்ளமாட்டான். ஒன்றுக்கு மூன்றுகச் செய்து கொண்டிருக்கும் என்னைப் போன்ற மடையனுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும்! ஏற்கத் தயாராயிருக்கிறேன் யுவர் ஆனர்!

மக்கள் திலகம் எம்.ஜி.ஆர் அளிக்கும்

உதயம் புரொடக்ஷன்ஸ்

# சிரித்து வாழவேண்டும்

ஈஸ்ட்மென்கலர் - ஜெமினி






திரைக்கதை - டைரக்ஷன்: எஸ்.எஸ்.பாலன்

தயாரிப்பு: மணியன், வித்வான் வே.லட்சுமணன்



வீடு அளவுக்குப் பெரிதான ஒரு தலை. கல்லால் ஆனது. ஆகாயத்தில் மிதந்து செல்கிறது! ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு வந்ததும் அது செங்குத்தாகப் பூமியை நோக்கிக் கீழே இறங்குகிறது. அந்தப் பிரதேசத்தில் மக்கள் காத்திருக்கிறார்கள். காட்டுமிராண்டிகளைப் போல் தோற்றமளிக்கும் முரட்டு மனிதர்கள்.

தலைக்குள்ளிருந்து ஒரு குரல் கம்பீரமாக ஒலிக்கிறது. ஆண்டவனின் குரல் போலத் தொனித்துக் கட்டளை விடுகிறது: 'மரண விதைகளை ஊன்றுங்கள்! உயிர் விதைகளை அழித்து விடுங்கள்! துப்பாக்கி ஏந்திச் செல்லுங்கள்! கொல்லுங்கள்!'

ஆகாயத்தில் மிதந்தபடி நிற்கும் தலையின் முகம் கீழ் நோக்கிச் சாய்கிறது. அதன் வாயிலிருந்து ஆயுத மழை பொழிகிறது. காத்திருக்கும் காட்டுமிராண்டி ஜனங்கள், பட்டினிப் பட்டாளம் சோற்றுக்குப் பறப்பது போல் பறந்து ஆயுதங்களை அள்ளிக்கொள்கிறார்கள்!

தலை, தன் பணி முடித்ததும் உயரே கிளம்பிச் சென்று மறைந்து விடுகிறது. இப்போது ஒரு மனிதன் நம் முன்னால் எழுந்து நிற்கிறான். தொடை வரை உயர்ந்துள்ள பூட்ஸ்களும், சிவப்பு நிறத்தில் ஒரு கோவணமும் அணிந்திருக்கிறான். அகன்ற பலம் மிக்க நெஞ்சம் வெற்றுடலாக இருக்கிறது. ஆனால் அதில் இரட்டை வடமாகத் துப்பாக்கித் தோட்டாக்கள் மட்டும் தொங்குகின்றன. அவனது வெறித்த பார்வையில் ஒரு பயங்கரத்தன்மை இருக்கிறது.

# ஸார்டாஸ்: எதிர்காலக் கடவுள்!

காமிராவை உற்றுப் பார்க்கிறான். துப்பாக்கியை உயர்த்திச் சுடுகிறான் — நம்மை!

ஜான் பூர்மான் தயாரிக்கும் புதிய திரைப் படத்தின் ஆரம்பக் காட்சி இது! 'ஸார்டாஸ்' என்பது அதன் பெயர். எதிர்காலம் பற்றிய கற்பனைச் சித்திரம். இருபத்தி மூன்றும் நூற்றாண்டில் உலகம் எப்படி இருக்கும் என்று நமக்குக் கோடிகாட்ட முயல்கிறது திரைப் படம். ஸார்டாஸ் அயர்லாந்து நாட்டில் படமாக்கப்பட்டது. சிக்கல் மிகுந்த கதை. திரைப் படக் காமிராவுக்கு ரொம்ப ரொம்ப வேலை. எனினும் ஏழே வாரங்களில் படப்பிடிப்பை முடித்தார் பூர்மான்.

ஜேம்ஸ்பாண்ட் புகழ் ஷியான் கோனரி (படம்) இதில் கதாநாயகன். பாண்ட் அசகாய சூரன்தான் என்றாலும் சிக்கான தோற்றமளிப்பவன். அவனது மெருகேறிய நாகரிகக் குணசித்திரத்துக்கும் இதில் ஷியான் கோனரி ஏற்றுள்ள முரட்டுத்தனமான அநாகரிகப் பாத்திரப் படைப்புக்கும் சம்பந்தமே யில்லை.

பூர்மான் நூதனமான கருத்துள்ள கதைகளைத் திரைப்படமாக்குவதில் வல்லுனர். உதாரணமாக 'டெலிவரன்ஸ்' என்ற அவரது திரைப்படத்தின் கதையைப் பார்ப்போம்.

இயற்கையை மனிதன் என்ன பாடு படுத்துகிறான்? சற்றுச் சிந்தியுங்கள். வனங்களை அழிக்கிறான்; விலங்குகளைக் கொல்கிறான்; அணு சோதனை நடத்திச் சூழலை நச்சு மயமாக்குகிறான். தொழிலகங்களும் மோட்டார் கார்களும் வெளியேற்றும் விஷ வாயுப் புகை வேறு. கழிவுப் பொருள்களை ஆற்றிலும், ஏரியிலும் கலந்து பாழ்படுத்துகிறான். இப்படி எத்தனை எத்தனையோ.

இயற்கை இதற்கெல்லாம் மனிதனைப் பழி வாங்கத் தீர்மானித்தால்?

கற்பனை இவ்வாறு விரிகிறது, பூர்மான் திரைப்படத்தில். தென் அமெரிக்காவில் நாலு மனிதர்கள் படகேறி ஆற்றோடு சென்று பார்க்கத் தீர்மானிக்கிறார்கள். ஒரு வீர



## தமாஷ் வெடிகள்!

★ "அந்த தம்பி ஏன் இவ்வளவு கோபமாகப் போகிறான்?"

"யாரோ தெரியாமல் அவனைக் 'கங்கா ஸ்நானம் ஆச்சா?' என்று கேட்டு விட்டார்களாம்! அதனால் தான்!"

★ "அத்திம்பேர்! நான் என் சிநேகிதர்களிடம் என் அத்திம்பேர் ஒன்றும் கஞ்சக் கருமி இல்லை. அவர் ஒரு 'ஜென்டில்மேன்', அறிவாளி, இங்கிதம் தெரிந்தவர், கண்டிப்பாக எனக்குத் தீபாவளிக்கு இருபது ரூபாய் கொடுப்பார் என்று சொல்லியிருக்கிறேன்!"



★ விருந்தாளி: "ஐயோ! என்னால் இத்தனை பட்சணங்கள் சாப்பிட முடியாது. அதிலிருந்து ஒரு லட்டுவை எடுத்து விடுங்கள்!"

★ "ஆமாம், போன வருடம் உங்கள் தங்கை வீட்டுக்குத் தீபாவளியன்று போய்க் கோதுமை அல்வா சாப்பிட்டு வந்தீர்களே, இந்த முறை மட்டும் ஏன் போகவில்லை?"

"போன முறை போனதனால்தான்!"

— கே. வி. முரளி

---

சாகஸ விளையாட்டாக அந்தப் பயணத்தை மேற்கொள்கிறார்கள். இயற்கை மனித குலத்தின் பிரதிநிதிகளாக அந்த நால்வரையும் கருதிப் பழி வாங்கத் தீர்மானிக்கிறது. அவ்வளவுதான் இந்தப் பயணத்தின்போது இயற்கையுடன் ஒரு பெரும் போராட்டம் நிகழ்த்த வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு அந்நால்வரும் உள்ளாகிறார்கள். ஓரிருவரைக் காவு கொடுத்துவிட்டுப் பல சிரமங்களைக் கடந்து மற்றவர்கள் தப்பிவரும்போது அவர்கள் மீது கொலைக் குற்றம் புரிந்ததாகச் சந்தேகம் எழுகிறது! மேலே வளர்கிறது, கதை!

கதை இதில் முக்கியமல்ல. அது கொண்டிருக்கும் கருத்தும் அக்கருத்து நன்கு விகசிக்குமாறு படம் பிடித்திருக்கும் முறையும் நம் இதயத்தை உலுக்கி எடுத்துவிடுகிறது.

ஸார்டாஸ் என்ற படத்திலும் பூர்மான் நூதனமான கற்பனையைத் திரை ஓவியமாக்கியுள்ளார். தொழில் விஞ்ஞான முன்னேற்றத்தில் வியத்தகு சாதனைகளைப் புரிந்த மேற்கத்திய உலகம் 1990ஆம் ஆண்டில் அணு யுத்தத்தினால் அழிந்து போகிறது. அழிந்துபட்ட நாடுகளிலிருந்து தப்பித்துக் கொண்டு ஓடிய மக்கள் காட்டுமிராண்டிகளாகிறார்கள். ஸார்டாஸ் என்ற எதிர்காலக் கடவுளுக்கு அஞ்சி வாழ்கிறார்கள். ஸார்டாஸின் அடிமை ஸெட் (ஷியான் கானரி). அவன் இந்தக் காட்டுமிராண்டி ஜீவன்களைப் படிப்படியாக அழிப்பதற்கெனவே ஸார்டாஸினால் அமர்த்தப்பட்டிருக்கிறான். இந்த வேலையைச் செய்து செய்து அடிமை ஸெட்டுக்கு அலுத்து விட்டது. இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட கல்லாலான பிரம்மாண்டமான பறக்கும் தலையில் ஏறித் தப்பி ஓடுகிறான். காட்டுமிராண்டிகளிடம் ஆயுதங்களைப் பொழிந்து புரட்சிக்கு வழி வகுக்கிறான்.

இவர்கள் வார்டெக்ஸ் எனப்படும் அழிவில்லா மக்களோடு போரிடத் தொடங்குகிறார்கள். வார்டெக்ஸ்வாசிகள் ஒரு லட்சிய உலகைச் சிருஷ்டித்திருக்கிறார்கள். அங்கே சரீர இச்சைகளுக்கும் இடமில்லை; இறையுணர்ச்சிக்கும் அவசியமில்லை! உலகம் தோன்றிய காலம் முதல் ஏற்பட்ட ஞானத்தையெல்லாம், அனுபவங்களையெல்லாம் வார்டெக்ஸ்வாசிகள் கிரகித்துக் கொண்டு விட்டார்கள். அவர்களில் ஒருவன் அல்லது ஒருத்தி இறந்தால் மற்றவர்கள் கூட்டுச் சேர்ந்து அவனை அல்லது அவளை நினைவாற்றலால் மீண்டும் சிருஷ்டித்து விடுவார்கள்!

இவர்களுடைய ஸார்டாஸ் கடவுள் ஓர் ஏமாற்று வித்தை; சாமானியர்களான காட்டுமிராண்டிகளை அச்சுறுத்தி வைக்க உருவாக்கப்பட்ட ஒன்று என்பதை யதேச்சையாக ஸெட் கண்டுபிடித்து விடுகிறான். சாமானியர்களைச் சகித்துக் கொள்ள முடியாமல், அவர்களை அழிக்கத் தன்னைப் பயன்படுத்துகிறார்கள் என்பதை உணர்கிறான். வார்டெக்ஸ்வாசிகளைப் பழி வாங்கத் தீர்மானிக்கிறான்.

விஞ்ஞான முன்னேற்றம் அளவுக்கு அதிகமாகப் போகும்போது இன்றுள்ள வாழ்க்கை முறையே அழிந்து அறிவாளிகள் சமூகம் என்றும், சாமானியர் சமூகம் என்றும் (பணக்காரன் — ஏழை அல்ல) பிரிவினை ஏற்படலாம் என்பதையும் அதிலிருந்து புதுப் புதுப் பிரச்னைகள் எழலாம் என்பதையும் உணர்த்துகிறது ஸார்டாஸ்.

ஆன்மீக சக்தியையும் உடல் சக்தியையும் வண்ணச் சிதறல்களுடன் கூடிய ஒரு பந்தின் மையத்தில் பாதுகாத்து வைக்கக் கூடிய நூதனமான ஓர் எதிர்கால உலகத்துக்கு நம்மை அழைத்துப் போகிறது ஸார்டாஸ்.

இதுபோன்ற திகைப்பும் பிரமிப்பும் ஏற்படுத்தும் காட்சிகள், கற்பனைகள் பலப்பல. காமிராக் கலைஞரின் திறனும் இயக்குனரின் ஆற்றலாலும் ஸார்டாஸ் சிந்தனை சக்தியுடன் பலப் பரீட்சை நடத்தும் ஒரு திரைப் படமாக விளங்குகிறது. அடர்த்தியானது. அந்தரங்கமானது எளிதில் அர்த்தமாகாததும்கூட.

ஸார்டாஸின் முடிவு சோகமானது. அணு யுத்தத்தின் முடிவில் வாழ்பவர்கள் இறந்தவர்கள்மீது பொறாமைப்படுவார்கள் என்ற கருத்துக்கு வலுவளிக்கும் முடிவு.

அலெக்ஸாண்டர் வாக்கர் வரைந்து, 'லண்டன் பிரஸ் ஸர்வீஸ்' மூலம் வந்த கட்டுரையை ஆதாரமாகக் கொண்டு எழுதியவர்: குட்டி கிருஷ்ணன்



"ரொம்ப விலையுயர்ந்ததோ?"



"இல்லையே, இது கமலா"



# சொற்பச் செலவிலே சொர்குசான உடுப்பு

# கமலா

பாலியெஸ்டர்
இழைகலந்த ஷர்ட்டிங்

CU-A 1332

பிரபல பழனி வைத்தியராஜ்

## டாக்டர் எஸ். காளிமுத்து

R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.

அவர்களிடம் கீழ்க்கண்ட இடங்களில் நேரில் வைத்திய ஆலோசனை பெறலாம்




**சந்திக்கும் விலாசங்கள்**

10-ந் தேதி திருப்பத்தூர் (N. A.): சங்கர் கபே பகல் 1 மணி முதல் 2-30 மணி வரை.

10-ந் தேதி ஆம்பூர்: N. A. B. லாட்ஜ், மாலை 3-30 மணி முதல் 5 மணி வரை.

11ந் தேதி வேலூர் (N.A.): அஜீஸ் மேன்ஷன்ஸ் காலை 8 மணி முதல் 11 மணி வரை.

11-ந் தேதி குடியாத்தம்: அலங்கார் லாட்ஜ் பகல் 1 மணி முதல் 3 மணி வரை.

12-ந் தேதி பெங்களூர் ஸிடி: நியூ எவரெஸ்ட் ஹோட்டல், காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

13-ந் தேதி கிருஷ்ணகிரி: ஸ்ரீ ராம் லாட்ஜ், காலை 8 மணி முதல் 10 மணி வரை.

13-ந் தேதி தர்மபுரி: சீனிவாசா லாட்ஜ் காலை 11 மணி முதல் 12 மணி வரை.

13-ந் தேதி சேலம்: லக்ஷ்மி ராஜபவன் லாட்ஜில், பகல் 2 முதல் 5 மணி வரை.

15-ந் தேதி ஈரோடு: நவபவனம் லாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை.

15-ந் தேதி திருப்பூர்: ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜில் பகல் 2 மணி முதல் 4 மணி வரை.

15-ந் தேதி பொள்ளாச்சி: ஹோட்டல் தோஞ்சனி, மாலை 5-30 மணி முதல் 7-30 மணி வரை.

16-ந் தேதி கோவை: விஜயா லாட்ஜ், காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

17-ந் தேதி சென்னை: ஸ்ரீலேகா ஹோட்டல் மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

18-ந் தேதி சென்னை: ஸ்ரீலேகா ஹோட்டல் காலை 9 மணி முதல் 12 மணி வரை.

19-ந் தேதி பம்பாய்: சாரதா பவன் (மாதுங்கா), காலை 8 மணி முதல் மாலை 3 மணி வரை.

## பழனி சித்தர் வைத்தியசாலை

போன்: 816] பழனி [தந்தி: சித்தர்

# கங்கா ஸ்நானம்

'குமிலி' ராஜேஸ்வரி



மலர்ந்து பூத்து நிற்கும் மைசூர்பாகைப் பார்த்தது "மாமி! என்ன இருந்தாலும் உங்களுக்குத் தனித் திறன்தான்! எத்தனை அழகாகச் செய்திருக்கிறீர்கள்?" கண்ணாடிக் காகிதத்தில் சுற்றிப் பரிசாக வெளிநாட்டு நண்பர்களுக்கே அனுப்பலாம் போலிருக்கிறதே!" என்றாள் கீதா.

கல்யாணி சிரித்துக் கொண்டாள். "எனக்குப் பண்ணுகிற திறன் இருக்கிறதோ என்னமோ உனக்குப் புகழும் திறன் நன்றாக இருக்கிறது" என்றாள் கல்யாணி.

"இருக்கிறதைச் சொல்வது புகழ்ச்சியாகுமா? எதை, எதையோ பெரிய கலை என்று போற்றுகிறோமே! இதையும் அந்தப் பட்டியலில் சேர்த்துக் கொள்ள வேண்டியது தான்" என அழுத்தமாகவே கூறினாள் கீதா.

"என் சிநேகிதி ராதா இருந்தால் இதைப் பார்த்ததுமே எத்தனை மகிழ்வாள் தெரியுமா? அவளுக்கு நல்ல ஆர்வம் உண்டு. விசேஷ தினங்களில் அவள் புதுமையாகத் தின்பண்டங்கள் செய்வதும், விருந்தினர்களுக்குக் கொடுத்து உபசரிப்பதுமே ஓர் தனி அழகு. நவராத்திரி கொலுவைப் பார்க்கிறாற் போல் நான் அவர்கள் வீட்டில் இதைப் பார்ப்பேன். இந்த முறை ராதா இங்கு இல்லையே?" என்றாள் அவள்.

"எங்கு போயிருக்கிறாள்? அவள் பிறந்த வீட்டுக்குத் தீபாவளி கொண்டாடவா?"

"பிறந்த வீட்டுக்கு இல்லை மாமி. அவர்கள் எல்லாம் இந்த முறை தீபாவளியன்று காசியில் இருப்பார்கள். ராதாகூட வேடிக்கையாகச் சொன்னாள், என்னைப் பார்த்துத்தான் கங்கா ஸ்நானம் ஆச்சான்னு கேட்கலாம்!" என்றாள்.

"கொடுத்து வைத்தவர்கள். நானும் கங்கா ஸ்நானம் பண்ண வேண்டும் என்று எத்தனை நாட்களாய்ச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். இன்னும் கைவரவில்லை" என ஒரு பெருமூச்சு விட்டார் கல்யாணி அம்மாள்.

கலீரென்று சிரித்தாள் கீதா.

அவளுடைய சிரிப்பு அந்த அம்மாளுக்கு வியப்பாகவே இருந்தது. "இப்படி ஏன் சிரிக்கிறாய் கீதா?" என்றாள்.

"காசிக்குப் போவது என்பது இவ்வளவு பெரிய விஷயமா? நீங்கள் விரும்பினால் அடிக்கடி புறப்படுகிற க்ஷேத்திராடன கோஷ்டியோடு போகலாமே?" என்றாள் கீதா.

"போகலாம். ஆனால் எதற்கும் ஒரு முறை இருக்கிறது கீதா. அப்படிச் செய்தால்தான் இந்த மாதிரி விஷயங்களில் பலனும் உண்டு. காசிக்குப் போவதானால் கணவருடன் போக வேண்டும். இல்லையாயின் மகனுடன் போக வேண்டும். தெரியுமா கீதா?"

"ஏன் மாமி, உங்க மகன் என்ன குறைவாகவா சம்பாதிக்கிறார்? நீங்க காசிக்குப் போகணும்னு சொன்னா அழைத்துக்கொண்டு போக மாட்டாரா?"

"அவன் அழைத்துக் கொண்டு போக முடியும். ஆனால் அழைத்துக் கொண்டு போக வேணும்கிற மனசு வரவேண்டும் இல்லையா? ஒவ்வொரு ஆண்டும் விடுமுறை எடுத்துக் கொள்ளும்பொழுது ஏதோ ஓர் இடத்துக்குப் போக வேண்டும் என்ற ஆவல் அவனுக்கும் அவன் மனைவிக்கும் வந்து விடுகிறது. அவர்கள் தனியாகப் போக வேண்டும் என்று புறப்படுகையில் நான் காசியைப் பற்றி வாயைத்தான் திறக்க முடியுமா? இப்படியே போகிறது ஒவ்வொரு வருடமும். நமக்கு வேளை வந்தால்தானே அவர்களுக்கும் தோன்றும்?" என்றார் கல்யாணி அம்மாள்.

கீதாவுக்கு இதனைக் கேட்டதும் சற்று வருத்தமாக இருந்தாலும் எதுவும் சொல்லத் தோன்றவில்லை.

கல்யாணி புறப்பட்டதும் வாசல் வரை கொண்டு விட வந்த கீதா, "உங்க உதவியை மறக்க மாட்டேன் மாமி. யார் இந்த நாளில் பெரிதாக இப்படியெல்லாம் உதவுகிறார்கள்?" என்றாள்.

"இதென்ன பிரமாதம் அம்மா. என் பெண்ணாயிருந்தால் செய்து கொடுக்க மாட்டேனா?" எனக் கூறி விடைபெற்றுக் கொண்டாள் அந்த அம்மாள்.

வீட்டுக்கு வந்ததும் அவள் மனம் கங்கா ஸ்நானம் செய்ய முடியவில்லையே என்ற நினைவிலேயேதான் சுழன்று கொண்டிருந்தது. ஓர் ஆண்டா, இரண்டாண்டா? அவளும் இருபத்தைந்து வருஷங்களாக இந்த ஆசையை வைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் கணவர் இருக்கும்வரை பிஸினஸ், பிஸினஸ் என்று பறந்து கொண்டிருந்தாரே தவிர அவள் விருப்பப்படி காசிக்குச் சில நாட்கள் ஒதுக்க மனம் வரவில்லை. அடுத்துப் பிள்ளை கோபுவும் எவ்வளவோ செலவழித்தானே! அம்மாவைக் காசிக்கு அழைத்துச் செல்வது அவ்வளவு முக்கியமானதாகத் தோன்றவில்லை. யாரைச் சொல்லியும் பிரயோசனமில்லை. வேளை வரவேண்டும். அந்த அதிர்ஷ்டம் இருக்க வேண்டும் என நினைப்பதைத் தவிர வேறு வழியில்லை.

"வருஷா வருஷம் இந்தக் கம்பெனியில் ஏற்பாடு செய்து அழைத்துக் கொண்டு போகிறானே! அப்படிப் புறப்படுங்களேன்!" என தாளுக்காகச் சொன்னாள் மருமகள் லலிதா.

சிரித்துக்கொண்டாள் கல்யாணி. இதற்கெல்லாம் பதில் சொல்லிப் புரிய வைக்க முடியாது என மௌனமாக இருந்துவிட்டாள். கங்கா ஸ்நானம் செய்வதற்குப் பிராப்தம் தான் வேண்டும். தன்னைவிட வசதிக் குறை

வானவர்களெல்லாம் போய்விட்டு வரவில்லையா என நினைத்தபொழுது வருத்தம் மேலோங்கியது. கங்கை நீர் மேலே படவும் தனி அதிர்ஷ்டம்தான் வேண்டும் என ஆயிரத்தொரு முறையாக நினைத்துக் கொண்டாள்.

பள்ளியிலிருந்து வந்த சங்கரன், ''என்ன பாட்டி என்னமோ போலிருக்கே?'' என அருகில் அமர்ந்து கன்னத்தை வருடினான். பத்தே வயதான அந்தப் பாலகனின் பிஞ்சுக் கரங்கள் அவளுக்குப் பெரும் ஆறுதலைத் தந்தன.

''நாளைக்குப் பள்ளிக்கூடம் விடுமுறையா, கண்ணு?''

''நாளைக் காலையில் போக வேண்டும் பாட்டி. மத்தியானம் விடுமுறை. நாளை பட்டாக விடலாம் இல்லையா?''

''ஓ, விடலாமே உங்கப்பா உனக்காக நிறைய பட்டாககள் அனுப்பியிருக்கிறாரே!''

''ஏன் பாட்டி, காசிக்குப் போகலேன்னு வருத்தமா?'' மிகவும் உண்மையாகக் கேட்டான் சங்கரன்.

அவன் கேள்வி அவளைச் சிரிக்க வைத்து விட்டது. ''இதற்கெல்லாம் வருத்தப்பட்டுக் கொண்டு என்ன பயன் சங்கரா? அந்த நீர் மேலே படப் புண்ணியம் செய்திருக்க வேண்டாமா? நல்ல சம்பாதிக்கிற பிள்ளைகள்தான் எனக்குப் பிறந்திருக்கிறார்கள்.''

''நீ கவலைப்படாதே பாட்டி பகீரதன் கதை சொல்வாயே! அதுபோல் கங்கையை உனக்காகக் கொண்டு வருகிறேன், பார்'' என்றான் தன் பிஞ்சுக் கரங்களை உயர்த்தி.

கல்யாணி சிரித்தாள். ''உன் தாத்தாவிடம் கேட்டாகி விட்டது. உன் அப்பாவிடம் கேட்டாகி விட்டது. காரியம் நடக்கவில்லை. என்றாலும் நான் நம்பிக்கையை விடவில்லை. அவர்களை நான் கேட்டேன். நீ எனக்குக் கங்கை கொண்டு வருகிறேன் என்கிறாய். நான் இன்னமும் அதை உண்மையாக நம்புகிறேன், அப்பா'' என்றாள் குரல் தழுதழுக்க.



தன் கல்யாணத்துக்கு வராத தோழியைக் கோபித்துக் கொண்டாள் நடிகை.



"என்னடி, என் கல்யாணத்துக்கு வராமலிருந்திட்டே? நீ வருவே வருவேன்னு எவ்வளவு ஆவலோடு காத்துக்கிட்டிருந்தேன், தெரியுமா?"

"மன்னிச்சுடடி... ஒரு தவிர்க்க முடியாத காரணத்தால் இந்தக் கல்யாணத்துக்கு வரமுடியாமல் போயிடுச்சு; அடுத்த தடவை உன் கல்யாணத்துக்கு நிச்சயமாய் வந்திடறேன்" என்றாள் தோழி.

***

நண்பர்கள் இரண்டு பேர் மதத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒருவர் இந்து மதத்தைத் தாக்கிப் பேசினார். அவர் கேட்டார்:

"பிள்ளையார் வாகனம் எலி. அந்தச் சின்னஞ்சிறு எலியால் எப்படிப் பிள்ளையாரைத் தாங்க முடியும்?"

இன்னொரு நண்பர் பதில் சொன்னார்:

"ஜாக்கி எவ்வளவு சிறியது? கார்களையும் பஸ்களையும் அது தூக்கவில்லையா?"

கேள்வி கேட்டவர் எதுவும் பேசவில்லை. -ஏ.வி.கி

---

சங்கர் விளையாடப் போய்விட்டான். கல்யாணியும் தன் வேலைகளைக் கவனிக்கத் தொடர்ந்தாள்.

பூரணமாக ஒன்றை முழு மனத்துடன் விரும்பினால் நடக்காமல் போகாது என் பார்கள். என்னுடைய எண்ணத்தில்தான் தீவிரம் போதவில்லையோ? கல்யாணி அப்படித்தான் நினைத்தாள்.

விளையாடச் சென்றுவிட்டாலும் சங்கருக்கு பாட்டியின் முகமே கண்முன் இருந்தது. 'பாவம், பாட்டி! இந்த அப்பாதான் பாட்டியைக் காசிக்கு அழைத்துக் கொண்டு போகக் கூடாது? போன வருஷம் ஜப்பானுக்குக்கூடப் போய்விட்டு வந்தாரே!' என நினைத்தான். அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதிப் பணத்தைப் பெற்றுக் கொண்டு தானாவது பாட்டியைக் கங்கா ஸ்நானம் செய்ய அழைத்துப் போக வேண்டும் என்ற திடமான தீர்மானம் ஏற்பட்டது. அப்பாவும் தாத்தாவும் தீவிரமாக எடுத்துக் கொள்ளாத விஷயத்தைச் சங்கரன் மிகத் தீவிரமாக எடுத்துக் கொண்டிருந்தான்.

'காசி இங்கிருந்து எவ்வளவு தூரம்?எத்தனை நாட்கள் பயணம்?' என்றெல்லாம் பாட்டியைக் கேட்டுத் துளைத்து எடுத்துவிட்டான் சங்கர்.

**ம**றுநாள் பள்ளியிலிருந்து வந்த சங்கர் ஒரு குதியோடு ஓடிவந்தான். "பாட்டி! நாளைக்கு நீ கங்கா ஸ்நானம் செய்யலாம். நான் சொன்னேனே பகீரதனைப் போல் கங்கையை நீ இருக்கும் இடத்துக்குக் கொண்டு வருகிறேன் என்று, கொண்டுவந்து விட்டேன்!" என்று அவள் கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டான்.

கல்யாணி எதுவும் புரியாமல், "என்ன சொல்லறே கண்ணு, கங்கையைக் கொண்டு வந்தாயா?" என்றாள்.

"அதோ பார் பாட்டி!" வாசலை நோக்கி அவன் தளிர்க் கரங்கள் நீண்டன. வண்டியிலிருந்து பானை போன்ற ஒன்றை ஒருவர் எடுத்துக் கொண்டு வந்திருந்தார். கூடவே வந்த ஆசிரியர் 'நீங்கதான் சங்கரின் பாட்டியா? எங்கள் தலைமை ஆசிரியர் இந்தக் கங்கை தீர்த்தத்தைத் தங்களுக்குக் கொண்டு வந்து தரச் சொன்னார்" என்றார்.

கல்யாணிக்கு எதுவுமே புரியவில்லை. "கங்கையா!" அதிர்ச்சி அவளைப் பேச முடியாமல் செய்தது.

கூட வந்த ஆசிரியர், "சங்கருக்கு இந்த ஆண்டும் பரிசு இருக்கிறதம்மா. எங்க பள்ளி நிர்வாகி அவனைக் கூப்பிட்டுச் சில பொருள்களைச் சொல்லி எது வேண்டும் எனக் கேட்டார். பள்ளியின் விஞ்ஞானப் பகுதியில் மேல் நாடுகளில் கங்கை நீரைக் கொண்டு செய்துள்ள ஆராய்ச்சிகளின் அடிப்படையில் இன்னும் சில முறைகளுக்கு அவைகளைப் பயன்படுத்தலாமா என ஆராயும் வகையில் பல பீப்பாய்களில் கங்கை நீரைக் கொண்டு வந்திருக்கிறோம். எங்கள் ஆசிரியர் ஒருவர் இதற்காகவே ஹரித்வார் போய்க் கொண்டு வந்தார். 'எனக்குப் பரிசு எதுவும் வேண்டாம். எங்க பாட்டிக்குக் கங்கை நீர் வேண்டும். அதைத் தாருங்கள் போதும்' என்றான். எங்கள் நிர்வாகிக்கு வியப்புத் தாங்கவில்லை. சிறுவர்களின் தேவைகளைப் பெரியவர்கள் அறிந்து செயல்படுவது இயல்பு. பாட்டியின் தீவிர ஆவலை இந்தக் குழந்தை இவ்வளவு ஆழமாக எடுத்துக்கொண்டு நிறைவேற்ற முயல்கிறானே என நினைக்கையில் எங்கள் கண்களில் நீர் வந்து விட்டது. எங்கள் நிர்வாகி இதனை சங்கருக்கு விசேஷப் பரிசாகத் தந்திருக்கிறார். சுத்த கங்கை நீர். எங்கு வைப்பது?" என்றார்.

நயனங்களில் நீர் திரையிட, 'பெரியவர்களுக்குப் புரியாத ஆவல் உனக்கு எப்படியடா புரிந்தது? அதனால்தான் குழந்தை தெய்வத்தை வழிப்படுவது என வைத்துக் கொண்டிருக்கிறார்களோ' எனப் பல எண்ணங்கள் குமுற அவனை இறுக அணைத்துக் கொண்டாள். பிறகு, "இப்படி வையுங்கள்" என அவசரம் அவசரமாக ஒரு மரப் பலகையை எடுத்து வந்து அதில் கோலத்தைப் போட்டு வைத்தாள்.

கங்கையைக் கொண்டு வந்த ஆசிரியர், கல்யாணி கொடுத்த பழரசத்தை அருந்தி விட்டு ஆசிகளைப் பெற்றுக்கொண்டு சென்றார்.

"பாட்டி, இப்போ சொல்லு பாட்டி! 'ஐடியா' எப்படி? அந்தக் கங்கை ஜலம் வந்து வண்டியில் இறங்கியவுடனேயே நான் தலைமை ஆசிரியரைப் பார்த்துக் கேட்க வேண்டும், எத்தனை பணம் கேட்டாலும் அப்பாவிடமிருந்து வாங்கித் தந்துவிடலாம் என்று இருந்தேன். அதுவாகவே சான்ஸ் வந்தது. இப்போ என்ன சொல்றே? தாத்தாவாலே முடியாதது, அப்பாவாலே முடியாதது என்னால் முடிந்ததா, இல்லையா?" என்றான் பேரன் கம்பீரமாக.

கல்யாணிக்கு உணர்ச்சிகளின் மோதலில் வார்த்தைகள் அகப்படவில்லை.

"கங்கா ஸ்நானம் பேரன் செய்து வைத்தானா மாமி!" எனக் கேட்டுக் கோதா சிரித்த பொழுது அவளும் முழுமையாக அந்த மலர்ச்சியில் கலந்து கொண்டாள்.

*LISTEN TO THIS AD.*



# KAMAKSHI SUPRABHATAM

## M. S. SUBBULAKSHMI'S Latest Featuring




AT




KERMANI BUILDINGS,
Sir Phirozshah Mehta Road, Fort, Bombay - 400 001
Tel.: 255081

---

சகல சௌபாக்யங்களும் பெருக
சாஸ்திரியாரின் புடவைகள்
சாலச் சிறந்தவை என்பது சான்றோர் வாக்கு

# சம்பூர்ண

## சாஸ்திரியார் & சன்ஸ்

28, வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4.

போன்: 71719

14 - A. Parkside Road, Calcutta - 26
Phone: 46 - 3976

# அலைமோதும் கலைப்படைப்பு!

## ஸி ஸி எம் அளிக்கிறது.

பிரமிப்பூட்டும் வண்ணக் களஞ்சியம்
விலிவிளம் புடவைகள், காலத்துக் கேற்ற
தனித் தன்மை வாய்ந்த சூட்டிங்குகள் •
ஷர்ட்டிங்குகள் • பள்ளிச் சிறுவர்களுக்
கேற்ற கேஸ்மெண்டுகள் • எல்லோருக்கும்
உகந்த வேஷ்டிகள் • இன்னும் பலப் பல
படைப்புகள்.

**ஸி ஸி எம் அளிப்பது**
**வண்ணப் புதையல்கள்**



**தி கோயம்பத்தூர்**
**காட்டன் மில்ஸ் லிமிடெட்**

புது

**மிர்ராபோ**
புல் வாயில் புடவைகள்
''ஆண்டிகிரஸ்'' 2/120X2/120 எற்ற
புல் வாயில் சோளித் துணிகள்.

**எவகுன்லபா** சூட்டிங்
பாலியிஸ்டர் காட்டன் 67%—33%.

**லெஸ்லின்** ஷர்ட்டிங்
பாலியிஸ்டர் காட்டன் 67%—33%.

**ஸ்ட்ரேஞ்சர்** ஷர்ட்டிங்
மெர்ஸிரைஸ்ட் பாப்ளின்.

ஸில்வர் கிங், வேஷ்டிகள்,
மல், கேஸ்மெண்ட் துணிகள்

# திருடர்கள்



ர.சு. நல்லபெருமாள்

## 18. தொழிற்சங்கத் தரகர்கள்

புரட்சிக் கட்சியின் கூட்டம் முடிந்து கருணாகரன் காரில் ஏறியபோது, இரவு மணி ஒன்பது. எதிர்பார்த்ததைவிடக் கூட்டம் சீக்கிரம் முடிந்துவிட்டதால், வீட்டுக்குப் போய் விட்டுப் பிறகு ராகவனைப் பார்க்கச் செல்லலாமா என்று நினைத்தார். ஆனால் ராகவனை விரைவில் காண வேண்டும் என்ற எண்ணம் எழவே, காரை ராகவனின் அலுவலகத்தை நோக்கிச் செலுத்தினார்.

கஜேந்திரா மில்லின் வாயிலை நெருங்கிய போது தொழிலாளர் பலர் கூடியிருந்ததைக் கண்டார். கருணாகரனின் காரைக் கண்டதும் தொழிலாளர்கள் உற்சாகத்துடன் காரைச் சூழ்ந்து கொண்டார்கள். கருணாகரன் புன்னகையுடன் காரிலிருந்து இறங்கினார்.

''எல்லோரும் அமைதியாக இருங்கள். உங்களுடைய பிரச்னையைப் பற்றிப் பேசி முடிவுசெய்துவிட்டு வருகிறேன்'' என்றார்.

கூட்டத்திலிருந்த ஒருவன், ''நம்முடைய கோரிக்கைகளை ஏற்காவிட்டால், வேலைநிறுத்தந்தான்'' என்று கத்தினான்.

''கட்டாயம் வேலைநிறுத்தந்தான். அதில் சந்தேகமேயில்லை. வெற்றி கிட்டும்வரையில் போராட்டம்தான்'' என்றார் கருணாகரன்.

''போனஸ் விஷயம் எப்படியோ? மில் நஷ்டத்தில் ஓடுவதாக முதலாளி சொல்கிறாரே!'' என்றான் மற்றொருவன்.

''நஷ்டமாவது மண்ணாவது. வருமான வரி ஆபீஸுக்குக் கொடுக்கும் கணக்கை நாம் நம்பத் தயாரில்லை. நம்முடைய எல்லாக் கோரிக்கைகளும் ஏற்கப்பட வேண்டும். அது வரை நான் ஓயமாட்டேன். இந்தப் போராட்டத்தில் என் உயிரையே பணயமாக வைக்கவும் தயார்'' என்று கருணாகரன் உணர்ச்சி பொங்கப் பேசியதும், தொழிலாளர்கள் கரகோஷம் செய்தார்கள். சிலர் உற்சாக மிகுதியால் சீட்டியடித்தார்கள்.

''தோழர் கருணாகரன்...''

''வாழ்க!''

''போராட்டம்...''

''நடத்தியே தீருவோம்''

''முதலாளி வர்க்கம்...''

''ஒழிக!''

''பாட்டாளிகளின் இரத்தத்தைச் சுரண்டும் பூர்ஷ்வா வர்க்கம்...''

''ஒழிக!''

''புரட்சிக் கட்சி...''

''ஒழிக!''

''ஏ, மடப் பசங்களா, வாழ்க சொல்லுங்க'' என்று ஒருவன் இரைந்துவிட்டு, ''புரட்சிக் கட்சி...'' என்று கத்தினான்.

''வாழ்க!''

உற்சாகத்துடனும்; மிகுந்த நம்பிக்கையுடனும் கருணாகரனைக் கஜேந்திரா மில்லின் அலுவலகத்துக்கு அனுப்பி வைத்தார்கள், தொழிலாளர்கள்.

மில்லின் வாசலில் ஒலித்த கோஷங்கள் அலுவலக அறையில் அமர்ந்திருந்த ராகவனுக்கும் கேட்டன. அவருடைய முகத்தில் கவலையின் சாயல் படர்ந்திருந்தது. ஏற்கெனவே மில் நஷ்டமடைந்து கொண்டிருந்தது. உற்சாகத்தோடும், கட்டுப்பாடோடும் ஒழுங்காக வேலை செய்து கொண்டிருந்த தொழிலாளர்கள், கருணாகரனின் தூண்டுதலினால் மந்தமாக வேலை செய்யத் தொடங்கினர். வேலையில் சுறுசுறுப்பையும் உற்பத்தியில் பெருக்கத்தையும் காட்ட வேண்டுமானால் அவர்களுடைய மூன்று அம்சக் கோரிக்கைகளை ஏற்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். பிறகு, அவர்களுடைய கோரிக்கைகளை ஏற்காவிடில் வேலைநிறுத்தம் செய்வதாகக் கருணாகரன் அறிக்கை விட்டார். அமைதியாகவும் சுபிட்சமாகவும் நடைபெற்றுக் கொண்டிருந்த கஜேந்திரா மில், புரட்சிக்



கட்சியின் தலையிட்டால் சங்கடத்துக்குள்ளாகியது. அந்தச் சிக்கலிலிருந்து மீள்வது எப்படி என்று தவித்துக் கொண்டிருந்தார், மில்லின் அதிபர் ராகவன்.

கருணாகரனோடு அந்த மில்லின் தொழிலாளியான முத்தையாவும் சென்றார். முத்தையா, கஜேந்திரா மில் தொழிலாளர் நலச் சங்கத்தின் காரியதரிசி. அவர்கள் இருவரும் ராகவனின் அறைக்குள் சென்றபோது ராகவன் முகமலர்ச்சியோடு வரவேற்றார். இருவரும் ராகவனுக்கு எதிரே யிருந்த நாற்காலிகளில் அமர்ந்தனர். இருவருக்கும் குளிர் பானம் வழங்கப்பட்டது. கருணாகரன் பானத்தை உறிஞ்சுவதில் லயித்திருந்தார். ராகவன், பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்ற யோசனையில் ஆழ்ந்திருந்தார். பானத்தை அருந்தி முடித்ததும் கருணாகரன் கேட்டார்; "என்ன முடிவு செய்தீர்கள்?"

"கோரிக்கைகளை இப்போதைய நிலையில் ஏற்க முடியாது என்றுதான்" என்றார் ராகவன்.

"அப்படியானால், வேலைநிறுத்தந்தான்" என்றார் கருணாகரன், கண்டிப்புடன். பக்கத்திலிருந்த முத்தையாவைப் பார்த்தார். முத்தையா ஆமோதிப்பது போல் தலையை அசைத்தார்.

"சமரசத்துக்கு வழியில்லையா?" என்று கேட்டார் ராகவன்.

"நீங்கள்தான் இடம் கொடுக்கவில்லையே?" என்றார் கருணாகரன்.

"மில் தற்போது நஷ்டத்தில் ஓடுகிறது. தொழிலாளர்கள் மந்தமாக வேலை செய்கிறார்கள். ஆறு மாதங்களுக்கு முன் என்ன உற்பத்தியாயிற்றோ, அதில் முக்கால் பங்குதான் இப்போது உற்பத்தியாகிறது. இந்த நிலையில் கோரிக்கையில் என்ன நியாயம் இருக்க முடியும்?"

"அதற்காகத் தொழிலாளர்கள் பட்டினி கிடக்க வேண்டும் என்கிறீர்களா?" என்று கோபத்தோடு கேட்டார் கருணாகரன்.

"என்னுடைய மில்லில் வேலை செய்யும் யாரும் பட்டினி கிடக்கவில்லை. கிடக்கவும் முடியாது. இங்கு குறைந்த சம்பளம் வாங்குபவரே நூற்றைம்பது ரூபாய் வாங்குகிறார். பட்டினி என்பதற்கே அர்த்தமில்லை!"

"சோறு மட்டும் கிடைத்தால் போதுமா? வேறு வசதி வேண்டாமா? நீங்கள் மட்டும் காரில் சவாரி போக வேண்டும்; பாட்டாளிகளின் கால்கள் ஓடாகத் தேய வேண்டுமா, என்ன?"

இதைக் கேட்டதும் ராகவனுக்குக் கோபம் எழுந்தது. "நானாவது ஒரு மில்லை ஏற்படுத்தி நூற்றுக் கணக்கான தொழிலாளர்களின் பிழைப்புக்கு வசதி செய்திருக்கிறேன். நீங்கள் எந்தத் தொழிலாளிக்கு வாழ்வளித்தீர்கள்; காரில் செல்கிறீர்கள்?" என்று கேட்டார்.

கருணாகரனின் தன்மானம் கிளர்ந்தெழுந்தது. "நான் தொழிலாளர்களின் தலைவன். தொழிலாளர்களைச் சுரண்டும் முதலாளிகளின் எதிரி நான்" என்று இரைந்து கத்தினார்.

"சுரண்டும் முதலாளிகளைப் போய்ப் பாருங்கள். இங்கு நீங்கள் வந்திருக்க வேண்டியதில்லை. இடம் மாறி வந்துவிட்டீர்கள்" என்றார் ராகவன் சிரித்தபடியே.

"இந்த மில்லின் பாட்டாளிகளின் சார்பில் வந்திருக்கிறேன். செய்கிற வேலைக்குத் தகுந்த ஊதியம் கோரி வந்திருக்கிறேன்."

"இது உண்மையானால், தற்போது நான் கொடுக்கும் ஊதியத்தைக் குறைத்தாக வேண்டும். ஆறு மாதங்களுக்கு முன் உற்பத்தியான அளவில் முக்கால் பங்கைத்தான் இப்போது உற்பத்தி செய்கிறார்கள். ஆகையால் ஊதியத்தை முக்கால் பங்காகக் குறைக்க வேண்டியதுதான் நியாயம்."

"நீங்கள் விதண்டாவாதம் பேசுகிறீர்கள். உங்களைப் போன்றவர்கள் ரஷ்யாவில் இப்படிப் பேசியிருந்தால், தண்டனை பெற்றிருப்பார்கள்."

இதைக் கேட்டு ராகவன் கலகலவென்று சிரித்தார். "மிஸ்டர் கருணாகரன்! ரஷ்யாவைக் காட்டி அப்பாவித் தொழிலாளர்களை ஏமாற்ற முடியும். ஆனால் என்னை ஏமாற்ற முடியாது. அதே ரஷ்யாவில் ஒரு தொழிற்சாலையில் தொழிலாளர்களின் அசிரத்தையால் உற்பத்தி குறையுமேயானால், அந்தத் தொழிலாளர்களும் தண்டனைக்குள்ளாவார்கள் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்குமே. ஸ்டாலினுடைய ஆட்சியில் துப்பாக்கி முனையில் அவ்விதம் மடிந்தவர்களுக்கு அளவே இல்லையே?" என்றார்.

"சரி, இந்தப் பேச்செல்லாம் எதற்கு? எங்கள் மூன்று அம்சக் கோரிக்கைகள் பற்றி உங்கள் முடிவு தெரிய வேண்டும்" என்றார், கருணாகரன், கோபமாக.

"உங்களுடைய முதல் கோரிக்கை, மூன்று மாத போனஸ். ஏற்கனவே ஒரு மாதம் கொடுத்துக் கொண்டு வருகிறேன். இப்போதைய நிலையில் இதுகூட முடியாது. இரண்டாவது கோரிக்கை, வாரத்தில் ஐந்து நாட்கள் வேலை. இது எப்படிச் சாத்தியமாகும்?" என்றார் ராகவன்.

"ஏன் சாத்தியமாகாது? மேல் நாடுகளில் ஐந்து நாட்கள் வேலைதான். ஜப்பானிலும் ஐந்து நாட்கள் வேலைதான்."

ராகவன் சிரித்தார். "மிஸ்டர் கருணாகரன்! இந்த ஐந்து நாட்கள் வேலைக் கோரிக்கை இந்தியாவில் ஐம்பது அல்லது அறுபது ஆண்டுகளுக்குப் பிறகு கேட்க வேண்டிய ஒன்று. கிட்டத்தட்ட அரை நூற்றாண்டுக்குப் பின்னடைந்து கிடக்கும் நம் நாட்டில் ஐந்து

நாள் வேலைக் கோரிக்கை இந்நாட்டுக்குத் துரோகம் செய்வதாகும். இன்றைய நிலையில் வாரத்துக்கு ஒரு நாள் விடுமுறையே இந்நாட்டைப் பொறுத்தவரை படாடோபமான விஷயம்தான். மேல்நாட்டுத் தொழிலாளர்களைப் போல் நம்மவர்களுக்கும் உழைக்கும் மனப்பான்மை வந்த பிறகல்லவா இதைப் பற்றிப் பேசலாம். நீங்கள் கேட்கும் இந்தக் கோரிக்கை, தொழில் துறையில் மிகுந்த முன்னேற்றம் அடைந்துவிட்ட நாடுகளில் கேட்கப்பட வேண்டிய ஒன்று. இந்தியா வாரத்துக்கு எட்டு நாட்கள் வேலை செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறது. அரசியல் முதல் சில்லறை வியாபாரம் வரை ஊழல் மிகுந்திருக்கும் இந்தச் சமயத்தில் ஐந்து நாட்கள் வேலை என்பது தற்கொலைக்குச் சமானம்தான்.''

''நீங்கள் மேடையில் பேச வேண்டியதை இங்கு பேசுகிறீர்கள். எந்த நாடாயிருந்தாலும் தொழிலாளர் ஒன்றுதான். ஒரே வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்தாம்'' என்றார் கருணாகரன். குரலில் கோபம் தொனித்தது.

''வர்க்கம் ஒன்றாயிருக்கலாம். ஆனால் தரம்?''

''இந்தியத் தொழிலாளர்களின் தரத்துக்குஎன்னகுறை?'' மேஜையின் மீதுஒரு குத்து விட்டபடி கேட்டார்,கருணாகரன்.

''மேலை நாடுகளில் வேலைநிறுத்தம் என்றால், இயந்திரங்களைத் துடைத்து, கிரீஸ் போட்டு இயந்திரங்களைப் பத்திரமாக ஒப்படைத்துவிட்டுச் செல்கிறார்கள். இங்கே, தாங்கள் வேலை பார்க்கும் தொழிற்சாலையின் இயந்திரங்களையே உடைக்கிறார்களே! உற்பத்தியைப் பெருக்கிக் காட்டாமல் ஊதியத்தை மட்டும் கூட்டிக் கேட்கும் வேடிக்கை இங்கே நடைபெறுகிறது.''

''ஊதியம் கூட்டப்பட்டால் உற்பத்தி தானே பெருகும்'' என்றார் கருணாகரன் அலட்சியமாக.

''அதற்குத் தாங்கள் பொறுப்பு ஏற்க முடியுமா? ஏற்பதா யிருந்தால், நானேயே உங்களுடைய மூன்றாவது கோரிக்கையான ஊதிய உயர்வை ஏற்றுக் கொள்கிறேன்'' என்றார், ராகவன்.

கருணாகரன் திகைத்தார். பதில் கூற முடியாமல் திணறினார். ராகவனின் இதழ்களில் அலட்சியப் புன்னகை தோன்றியது. முத்தையா இருவரையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தார்.

''பொறுப்பேற்கத் தயாரா?'' என்று ராகவன் மீண்டும் கேட்டார்.

''அதெப்படி சார்...'' என்று கருணாகரன் தயங்கினார்.

''நீங்கள் மட்டும் என்ன சார்... நாட்டை ஆளும் தலைவர்கள் கூடப் பொறுப்பேற்கத் தயாரில்லை. இந்த நாட்டின் தலைவிதி இது. யாரும் எந்தப் பொறுப்பையும் ஏற்கத் தயார்



## நானும் இறங்க வேண்டும்!



அண்மையில் மதுரையில் டவுன் பஸ்ஸில் சென்று கொண்டிருந்தேன்.

ஒரு பெண் எழுந்து, "சிந்தாமணி இறங்க வேண்டும்" என்றாள்.

பஸ் நின்றது. அவள் இறங்கினாள்.

மீண்டும் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்றது. ஒரு கிராமவாசி எழுந்து, "ராமசாமி இறங்க வேண்டும்" என்றார்!

உடனே பஸ்ஸில் இருந்த அத்தனை பேரும் 'கொல்' என்று சிரித்துவிட்டார்கள்!

சிந்தாமணி என்பது அந்தப் பெண்ணின் பெயர் அல்ல; அவள் இறங்கின 'ஸ்டாப்'பின் பெயர் என்பது பாவம், அந்த ராமசாமிக்குத் தெரியாது போயிற்று! - என். எஸ். நாதன்.

---

இல்லை. ஆனால் லாபமும், பதவியும் மட்டும் அவர்களுக்கு வேண்டும். இது எவ்வளவு கேவலமான நிலை" என்று கூறினார் ராகவன். அவருடைய குரலில் தொனித்த கசப்பு, கருணாகரனை உலுக்கி விட்டது.

"சார்! நாங்கள் கேட்பது உங்கள் லாபத்தில் ஒரு பகுதியைத்தானே?" என்றார் கருணாகரன்.

"அப்படியானால், நஷ்டத்துக்கு யார் பொறுப்பு? அதுவும், தொழிலாளர்களின் அசிரத்தையால் ஏற்பட்டிருக்கும் நஷ்டத்துக்கு...?"

"நஷ்டமோ லாபமோ... தொழிலாளர்களின் இரத்தத்தை நாங்கள் உறிஞ்சவிட மாட்டோம்" என்று கர்ஜித்தார் கருணாகரன்.

"இந்த மாதிரி வார்த்தைகளுக்கு உங்கள் கட்சியாரிடமிருந்து நீங்கள் கைதட்டலைப் பெறலாம். ஆனால், உண்மை நிலையை அறிந்த என்னிடம் நீங்கள் பாராட்டுப் பெற முடியாது."

"உங்களுடைய பாராட்டு எனக்குத் தேவையில்லை, மிஸ்டர் ராகவன். பாட்டாளி தன் கரங்களை நம்பித்தான் இருக்கிறானே தவிர, பூர்ஷ்வாக்களின் புகழ்ச்சியை அல்ல" என்று படபடத்தார் கருணாகரன்.

சற்று நேரம் அறையில் அமைதி நிலவியது. ராகவன் மீண்டும் பேசினார்: "மிஸ்டர் கருணாகரன்! இப்படியே பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை. இந்த மில்லின் நிலையை உங்களிடம் சொல்லிவிட்டேன். வேண்டுமானால், மில்லின் கணக்கு வழக்குகளை நானே பாருங்கள். மில் நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருப்பது தெரியும்."

"வருமானவரி அலுவலகத்துக்கான கணக்கு எங்களுக்குத் தேவை இல்லை."

"என்னிடம் ஒரே கணக்குத்தான் உண்டு. உங்களுடைய கோரிக்கையை வாபஸ் செய்து விட்டு, தொழிலாளர்களை வேலை செய்ய விடுங்கள்."

"நானல்லவா தொழிலாளர்களைத் தடுத்து நிறுத்தியிருப்பது போல் பேசுகிறீர்கள்!"

"என்னுடைய தொழிலாளர்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். பொதுவாக எல்லாத் தொழிலாளர்களுமே நல்லவர்கள்தாம். நன்றி உள்ளவர்கள்தாம். ஆனால், தொழில் துறைக்கே சம்பந்தமில்லாதவர்கள் தலைவர்களாக இருந்து கொண்டு குழப்புகிறார்கள்."

கருணாகரனின் கண்கள் கோபத்தால் சிவந்தன. ஏற்கெனவே குரூரமாயிருந்த அவருடைய முகம் அப்போது இன்னும் விகாரம் அடைந்தது. "இது எங்கள் பிரச்னை. இதைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல உங்களுக்கு உரிமை இல்லை" என்றார்.

"இது உங்கள் பிரச்னை இல்லை. தொழிலாளர் பிரச்னை. என்னுடைய பிரச்னை. நீங்கள் ஒரு தொழிலாளரும் இல்லை; தொழில் அதிபரும் இல்லை. எனக்கும் என் தொழிலாளர்களுக்கும் இடையே இருக்கும் பந்தமும் உறவும், உங்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே இருக்கவே முடியாது. தொழிலாளர்களுடைய பிரச்னைகளை அவர்களே தொழில் அதிபர்களுடன் பேசித் தீர்க்க முனைந்தால் எவ்வளவோ நன்மைகள் விளையும். ஒரு தொழிற்சாலை ஒரு குடும்பத்தைப் போன்றது. குடும்பத்திலுள்ள பிரச்னைகளைக் குடும்பத்தில் உள்ளவர்களே தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர, வெளிநபரைத் தலையிட அனுமதித்தால், குடும்பமே சிதறிவிடும். ஒரு குடும்பம் சிதறுவதைப் பற்றி அந்த வெளிநபருக்கு அக்கறையும் இருக்காது. தொழிலாளர்களுக்கும், தொழில் அதிபர்களுக்கும் இடையே தரகர்கள் நுழையும்போதுதான்...."

"மிஸ்டர் ராகவன்! உங்கள் பேச்சை ஆட்சேபிக்கிறேன். என்னைத் தாக்கிப் பேசுவதை நான் பொறுக்க முடியாது" என்று இரைந்து கத்திக் கொண்டு கோபத்துடன் எழுந்தார் கருணாகரன்.

"தனிப்பட்ட முறையில் யாரையும் தாக்கவில்லை. பொதுப்படையாகத்தான் பேசுகிறேன். தொழில் துறையில் நிலவும் அமைதியின்மையையும், உற்பத்திக் குறைவையும், அதற்கான காரணங்களையும் கண்டு மனம் வெதும்பிப் பேசுகிறேன். இன்றைய யதார்த்த நிலையைப் பற்றிச் சொல்கிறேன்" என்றார் ராகவன் அமைதியுடன்.

முத்தையா, பதற்றத்துடன் கருணாகரனின் சட்டையைப் பிடித்து இழுத்து உட்கார வைத்தார்.

"கடைசியில் தொழிலாளர்களின் கோரிக்கைக்கு உங்களுடைய முடிவான பதில் என்ன?" என்று கருணாகரன் எரிச்சலோடு கேட்டார்.

"இன்றைய நிலையில் கோரிக்கை எதையும் ஏற்க இயலாது. நிலைமை அபிவிருத்தி அடைந்தால் பிறகு அதுபற்றிக் கவனிக்கிறேன்" என்றார் ராகவன்.

"அப்படியானால், திட்டப்படி வேலை நிறுத்தம் நடைபெற்றே தீரும்!"

"வேலைநிறுத்தம் செய்ய நீங்கள் தூண்டுவது தொழிலாளர்களுக்கு நன்மை செய்வதாகாது. வேலைநிறுத்தத்தால் இந்த மில் மேலும் நஷ்டமடைந்தாலோ அல்லது மில்லே மூடப்பட்டாலோ அதனால் சங்கடப்படப்

போகிறவர்கள், நானும் என்னுடைய தொழிலாளர்களும்தாமே தவிர, உங்களுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. இந்தத் தொழிற் சங்கம் இல்லையென்றால், வேறொரு தொழிற் சங்கத்தில் உங்கள் பொழுது கழியும்'' என்று ராகவன் சொன்னதும் கருணாகரன், கோபத்துடன் ''பாட்டாளிகளுக்கு எது நன்மை என்று எனக்குத் தெரியும்'' என்றார்.

''இப்படித்தான் எல்லாத் தலைவர்களும் சொல்லிக் கொள்கிறார்கள். பாவம்; தொழிலாளர்கள்!'' என்றார், ராகவன்.

கருணாகரன் கோபத்துடன் அறைக் கதவைத் திறந்து படாரென்று அறைந்து சாத்திவிட்டு வெளியேறினார். வராந்தாவுக்கு வந்த போது முத்தையா சொன்னார்: ''முதலாளி சொன்னதிலும் கொஞ்சம் நியாயம் இருக்கிறதே. கொஞ்சம் விட்டுப் பிடிப்போமே.''

''சீச்சீ, கூடவே கூடாது. இரக்கம் காட்டிவிட்டால் நாம் தோல்வி அடைந்துவிடுவோம். முதலாளிகள் விஷப் பாம்புகள் மாதிரி. நாம் அஜாக்கிரதையாக இருந்துவிடக் கூடாது...'' என்று கூறிவிட்டுக் காரில் ஏறினார், கருணாகரன். காரைச் சுற்றி நின்ற தொழிலாளர்களில் ஒருவர், ''வெற்றி கிட்டியதா ?'' என்று கேட்டார்.

''பேச்சுவார்த்தை இன்னும் முடியவில்லை. மீண்டும் ராகவனை விரைவில் சந்திப்பேன்'' என்று சொல்லி விட்டுக் காரை ஓட்டத் தொடங்கினார், கருணாகரன். அவருடைய கார் மறைந்தபிறகுகூட ஒன்றிரண்டு தொழிலாளர்கள் தொண்டை கிழியும்படி அவருக்கு 'ஜே' போட்டுக் கொண்டிருந்தார்கள்.

ராகவனிடம் தமக்கு ஏற்பட்ட தோல்வியை எண்ணிக் குமைந்தபடியே காரைச் செலுத்திக் கொண்டிருந்தார் கருணாகரன். மீண்டும் ஒரு முறை ராகவனைத் தனியே சந்தித்துப் பேச வேண்டும் என்று முடிவு செய்து கொண்டார். அவருடைய மனத்தில் ஏதோ ஒரு கணிப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஆவுடையப்பபிள்ளையின் அலுவலகத்தில் ஒன்பது மணிக்குப் பிறகும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. வழக்குக்கு வேண்டிய சில தீர்ப்புக்களை சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக்களிலிருந்து தேடிக் குறிப்பு எழுதிக் கொண்டிருந்தான், சம்பத். அவனுக்கு நளினி உதவியாக இருந்தாள். அவர்களுக்கு எதிரில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த ஆவுடையப்ப பிள்ளை தம்முடைய கையிலிருந்த சட்டப் புத்தகத்தை மூடிக் கீழே வைத்துவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். எதிரே கவனித்தார். சம்பத் எழுதிக் கொண்டிருந்தான். நளினி ஒரு பெரிய புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள்.

''கருணாகரனின் மனைவிக்கு வந்த கோபத்தைப் பார்த்தாயா ?'' என்று நளினியைப் பார்த்துக் கேட்டார் பிள்ளை.

''ஆண்களையெல்லாம் தாக்கிவிட்டாளே!'' என்றாள் நளினி. கையிலிருந்த புத்தகத்தை மூடினாள்.

''கருணாகரனைத்தான் தாக்கினாள், ராமனைத் தாக்கும் சாக்கில்'' என்றார் பிள்ளை.

''அப்படியா?'' சம்பத் வியப்புடன் கேட்டான்.



விஷமக் கவிதை - 6

•

ஜனநாயகம் !

வாக்குகள் கேட்டோர்
வாழ்வில் வளர்ந்தார்,
வாக்குகள் போட்டோர்
வாயும் இழந்தார் !

- தமிழ்மகன்

''பின்னே என்ன, ராமன் மீது அவளுக்குக் கோபம். கருணாகரன் ஒரு சந்தேகப் பேர்வழி. ஒருத்தியை மணந்து கொள்வானேன்? பிறகு இப்படிச் சந்தேகப்படுவானேன்?'' என்றார் பிள்ளை. ''சுத்தப் பைத்தியக்காரன்.''

''அவளுடைய பேச்சு பிரமாதம். ஒரு வேகத்தோடு உணர்ச்சி பொங்கப் பேசினாள்'' என்றாள் நளினி.

''எல்லோரும் கோமளத்தைப் புகழ்ந்து பேசினார்கள். இவள் மட்டும் பேச்சை வேறு திசையில் மாற்றிவிட்டாள். ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது, கருணாகரனைத் தாக்கிவிட்டாள். கருணாகரன் அவள் பேச்சைப் புரிந்து கொண்டு அசடு வழிய உட்கார்ந்திருந்தானே, நீ கவனிக்கவில்லையா ?'' என்று பிள்ளை கேட்டார்.

''இப்படி ஒரு சந்தேகப் பேர்வழியிடம் எப்படித்தான் காலம் கழிக்கிறாளோ, பாவம் !'' என்று அங்கலாய்த்தாள் நளினி. பிறகு, ''கோமளத்தை எல்லாரும் வானளாவப் புகழ்ந்துவிட்டார்கள்'' என்றாள்.

''பெரிய எழுத்தாளியாகி விட்டாள். புகழ்வதற்குக் கேட்பானேன்?'' என்றான் சம்பத்.

''அப்படி என்ன எழுதிவிட்டாள்?'' என்று அலட்சியமாகக் கேட்டார் ஆவுடையப்ப பிள்ளை. பிறகு சொன்னார்: '' நானும் ஒன்றிரண்டு கதைகளைப் படித்துப் பார்த்தேன். அசிங்கமாயிருக்கிறதே !''

''இது நியூவேவ் பாணி'' என்றான், சம்பத்.

''நியூவேவ் என்றால், எழுத்தில் ஆபாசத்தைப் புகுத்துவது என்று அர்த்தம்? பழைய முறையிலிருந்து விடுபட்டு எழுத்தில் புதுமையைப் புகுத்துவதுதான் நியூவேவ். எழுத்தின் நடையில், பாத்திரப் படைப்பில், கதையின் அமைப்பில், கருத்தில் புதுமை இருக்க வேண்டும். படுக்கை அறை நிகழ்ச்சிகளையும், பெண்ணின் உடல் அமைப்பையும், காம வக்கிரத்தையும் விளக்கமாக எழுதுவதா நியூவேவ் ? அரசியல்வாதிகள், தங்கள் சுயநல ஆசைகளுக்குச் சோஷலிஸம் என்று பெயரிட்டு நாட்டைக் குழப்புவது போல், நியூவேவ் என்ற பெயரில் எழுத்தாளர்கள் எழுத்துலகத்தைக் குழப்புகிறார்கள்.''

'' இவைதாம் இன்றைய இலக்கியங்கள்'' என்றான் சம்பத். ஆவுடையப்ப பிள்ளை சோகத்தால் முகத்தைச் சுளித்தார்.

''இவைதாம் இன்றைய எழுத்துக்கள் என்று சொல். இலக்கியம் என்னும் புனிதச் சொல்லை அதோடு சேர்க்காதே'' என்றார்.

''கோமளம் அப்படி எழுதுவதை எப்படித்தான் ஜட்ஜ் அனுமதிக்கிறாரோ?'' என்றாள் நளினி.



# மங்கள ஒளி படருக!

எங்கும் தீப ஒளிச் சுடரிலே
மங்களத்தின் ஒளி படருக!
சங்கு சக்கரக் கண்ணனால்
தரணியில் நலம் திண்ணமே!

தூய நல்லுடை வண்ணம்போல்
துலங்குக உயர் எண்ணமும்!
மாயன் கண்ணனின் பார்வையில்
மானிடக் குலம் உய்யவே!

வழங்கும் இன்சுவை அமுதமாய்
புழங்குக சொற்கள் இனிமையாய்!
முழங்கு வெடிகளின் தூசென
மூளும் குறைகளும் தீர்கவே!

நண்பரைக் கூட்டும் இந்தநாள்
நல்லதாய் நீள்க நாளுமே!
மண்ணிலே புது வாழ்வெழ
மாதவன் துணை வேண்டுவோம்!

- நம்பி சீனிவாசன்

மேலட்டை வண்ண ஓவியம்: மணியம் செல்வன்

---

''பாவம், அவர் என்ன செய்ய முடியும்? இழுடு தட்டிய பிறகு கல்யாணம் செய்து கொண்டால் கண்டிக்க முடியுமா?'' என்று கூறிச் சிரித்தார் பிள்ளை.

சுவர்க் கடிகாரத்தில் மணி பத்தடித்த ஒலி கேட்டுத் திடுக்கிட்டாள் நளினி. ''பத்தாகி விட்டது'' என்று பரபரப்புடன் கூறிக் கொண்டே எழுந்தாள்.

''நேரமாகிவிட்டது. வீட்டுக்குப் போ. சம்பத்! நீயும்கூடச் சென்று அவளை வீட்டில் விட்டு விட்டுப் போயேன்'' என்றார் பிள்ளை.

''சரி சார்!'' என்று தலையை ஆட்டினான் சம்பத்.

''வேண்டாம் சார்! நான் தனியே காரை ஓட்டிக் கொண்டு போய்விடுவேன்'' என்றாள் நளினி.

''நோ நோ.... மணி பத்தாகிவிட்டது. தனியே போகக் கூடாது. உன்னை வீட்டில் விட்டு விட்டு இவன் சிட்டி பஸ்ஸில் போய்க் கொள்வான்'' என்றார் பிள்ளை.

சம்பத் காரில் ஏறிக் கொண்டான். நளினி காரைச் செலுத்தினாள். வெளியே நிலவு காய்ந்து கொண்டிருந்தது. ஊர் உறங்கிக் கிடந்தது. அந்தச் சூழ்நிலை அவர்கள் இருவருக்குமே ரம்மியமாக இருந்தது. அடிக்கடி இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன. சம்பத்தின் கற்பனை, பலவிதமாகச் சுழன்று கொண்டிருந்தது —

அந்தக் காரும் அவளும் அவனுக்கே சொந்தமாயிருந்தால், எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்......

மனத்தில் கற்பனைக் கோட்டைகள் எழுந்தன. ஆனால் கற்பனைகள் அனைத்தும் நடைமுறையில் நிறைவேறுமா என்ற சந்தேகம் எழுந்ததும் அவனுடைய மனம் தவித்தது. ஒரு நீண்ட பெருமூச்சோடு ஆசை ததும்ப அவளைப் பார்த்தான். அவனுடைய பெருமூச்சின் ஒலியைக் கேட்டு அவனைத் திரும்பிப் பார்த்தாள் நளினி.

ஓர் ஆணழகனுடன் ரம்மியமான நிலவொளியில் தனிமையில் பவனி வருவதை எண்ணி உள்ளூற அவள் மகிழ்ச்சி அடைந்தாலும், அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அமைதியாகக் காரைச் செலுத்திக் கொண்டிருந்தாள். முனிசிபல் அலுவலகத்தின் திருப்பத்தில் கார் திரும்பியதும் எதிரே கருணாகரனின் கார் வந்ததைக் கண்டு தன்னுடைய காரின் வேகத்தைக் குறைத்தாள். கருணாகரன், தம்முடைய காரை அவளுடைய காருக்குப் பக்கவாட்டில் கொண்டு போய் நிறுத்தினார்.

'' என்ன இவ்வளவு நேரம்?'' என்று கருணாகரன் கேட்டார்.

''ஸீனியர் ஆபீஸில் வேலை'' என்றாள் நளினி. அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த சம்பத்தை உற்றுப் பார்த்தார் கருணாகரன்.

அந்த நேரத்தில் ஓர் ஆணோடு காரில் தனிமையில்....

கருணாகரனின் மனத்தில் பல கற்பனைகள் அசிங்கமாகச் சூழும்பின.

'' உங்கள் மனைவியை வீட்டில் இறக்கி விட்டேன்'' என்றாள் நளினி.

''தேங்க்ஸ்.... உங்களுக்குச் சிரமம்'' என்றார் கருணாகரன்.

''இதில் என்ன சிரமம்? தோளிலா சுமக்கிறேன். கார்தானே! மிஸ்டர் சிங்காரமும் வந்தார். அந்த ஆறடி உருவத்தையே என் கார் சுமந்ததே!'' என்று கூறி நளினி சிரித்தாள். கருணாகரன் பரபரப்படைந்தார்.

''யார்? சிங்காரமா?'' — பரபரப்பை வெளிக் காட்டாமல் கேட்டார்.

''உங்கள் ஜூனியர்தான். ஏதோ புத்தகம் வாங்க வேண்டும் என்று அவரும் உங்கள் வீட்டில் இறங்கிக் கொண்டார்'' என்றாள் நளினி.

கருணாகரனுக்கு உடல் முழுவதும் எரிவது போலிருந்தது. அந்த இடத்தைவிட்டு உடனே பாய்ந்து ஓட வேண்டும் என்ற வெறி ஏற்பட்டது.

'' உங்கள் மனைவியின் பேச்சுப் பிரமாதம்'' என்றாள் நளினி. அவளுடைய பேச்சு எதுவும் அவருடைய செவிகளில் ஏறவில்லை. மனம், அவருடைய படுக்கை அறையில் புகுந்து துளாவிக் கொண்டிருந்தது.

''தேங்க்ஸ்'' என்று மட்டும் முனகினார். பிறகு, ''சரி நேரமாகிவிட்டது, வரட்டுமா?'' என்று விடைபெற்றுக் கொண்டு காரைச் செலுத்தினார்.

''குட்நைட்'' என்று நளினியும் சம்பத்தும் சேர்ந்து சொன்னது அவருடைய காதுகளில் விழாதவாறு தடுத்துவிட்டது, அவருடைய காரின் இரைச்சல். அவருடைய மனத்தின் இரைச்சல் அதைவிட அதிகமாயிருந்தது. கார் கடும் வேகத்தில் ஓடியது. அதைவிட வேகமாக அவருடைய எண்ணங்கள் வீட்டை நோக்கிப் பறந்தன.

(தொடரும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

பவுடரினுல் துலக்கிய
பாத்திரத்தின் மீது பொடிக் கசடு
பின்தங்கியிருக்கிறதா?

# மாசில்லாத பளபளப்பை
# வீசிட வைப்பது
# விம்.




**கசடு இல்லை!**
**பிசுக்கு இல்லை!**
**கீறல் இல்லை!**

ன்டாஸ்-V-34-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

